ஆக 6 குரு 5 6-11-12, ஆக 4. புகர் 6-11-12, ஆக 3. சனி 3 5-6-11, ஆக 4. லக்கினம் 1-3-4-6-9-10-11, ஆக 6. புகர்—சுக்கிரன்.

## பிந்து கணக்கு விபரம்

ஒரு பிந்து இருந்தால் பயம் சஞ்சாரம் இரண்டு பிந்துக்கள் இருந்தால் மனஸ்தாபம் சோரபயம். வியாஜ்ய நஷ்டம் மூன்று பிந்துக்களுக்கு அன்னிய தேசவாசம் துர்பலம் சிந்தை வியாகூலம் நான்கு பிந்துக்களுக்கு சுகம், தனலாபம் ஐந்து பிந்துக்களுக்கு வஸ்திர அலங்காரம் பெருமை சந்தான தோஷம், வித்யா லாபம். ஆறு பிந்துக்கள் இருந்தால் அலங்காரம், ஆசாரம், வியாஜ்ஜிய சித்தி, வாகன லாபம். கீர்த்தி ஏழு பிந்துக்கள் இருந்தால் நல்ல வாகனங்கள் ராஜாங்க சன்மானம். பெருமை எட்டு பிந்துக்கள் இருந்தால் நற்குணம். சர்வ ஜீவ வாஞ்சை. புகழ் முதலாகிய பலன்கள் உண்டாகும். இந்தப் பலன்கள் நவக்கிரகங்களுடைய மகா தசா புத்தி யந்திரங்கள் கோசாரங்களில் அந்தந்தக் கிரகங்கள் மேற்சொல்லிய பிந்து கணக்கின்பலத்தை கொடுப்பார்கள்.

## சர்வ அஷ்டபிந்து

சர்வ அஷ்டவர்க்கத்தில் (14) பதினான்கு பிந்துக்கள் இருந்தால் பலஹானி பதினைந்து. பிந்துக்களுக்கு வறுமை. பதினாறு பிந்து இருந்தால் அவயவங்களில் பீடை வியாதி, பதினேழு பிந்து இருந்தால் துக்கம் பதினெட்டு பிந்து இருந்தால் ஐஸ்வர்ய நஷ்டம், பத்தொன்பது பிந்துவுக்குப் பந்துக்களால் நஷ்டம்,

மனோ நஷ்டம். இருபது பிந்துக்களுக்கு வியாஜ்யம். அவமானம், பொருள் செலவு இருபத்தி ஒன்று பிந்துக்கள் இருந்தால் சுகக்குறைவு, பிரயத்தின நாசம். இருபத்தி இரண்டு பிந்துக்கள் இருந்தால் கண்டம், மானக்குறைவு அதைரியம் இருபத்து மூன்றுக்குப் பொருள் செலவு, தைரியக் குறைவு, இருபத்து நான்கு இருந்தால் பொருள் நஷ்டம். இருபத்தைந்து இருந்தால் நாற்கால் ஜீவன் வாகனங்கள் பயிர் பொருள் இவைகளுக்கு நஷ்டம். இருபத்தாறு இருந்தால் மனோகிலேசம்: ஐஸ்வரிய நஷ்டம் இருபத்தேழு பிந்துக்கள் இருந்தால். சர்வ சம்பத்தும். இருபத்தெட்டு இருந்தால் ஐஸ்வரிய லாபம். இருபத்தொன்பது இருந்தால் நல்லோரெனப் புகழப்படுவது, முப்பதிருந்தால் சவுக்கியம், வங்களகரம், முப்பத்தொன்று இருந்தால் சர்வசுகபோகங்கள், சர்வ மங்களகரங்கள். முப்பத்திரண்டு இருந்தால் சர்வ பூஜ்யதை. ஐஸ்வரியலாபம், சுகஜீவனம் முப்பத்தி மூன்று இருந்தால் அதிக சம்பத்து, ஐஸ்வரிய லாபம். முப்பத்தி நான்கு இருந்தால் எல்லோராலும் புகழப்படுவது. சகலசவுக்கியானுகூலம். முப்பத்தைந்து இருந்தால் விசேஷ புத்தி யுள்ளோர்களெனப் புகழ்ச்சி முப்பத்தாறு இருந்தால் ராஜ்ய லாபம் முதலியவைகள் ஏற்படும். முப்பத்தாறு பிந்துக்களுக்கு மேற்பட்டிருந்தால் ராஜ்ய ஐஸ்வரியங்கள் விசேஷமாய் ஏற்படும், அஷ்டவர்க்கத்தில் பிந்துக்கள் இல்லா விடத்திலும், சத்துரு நீச வீடுகளில் இருக்கும். கிரகங்களின் மகாதிசா புக்தி அந்தர காலங்களில் பொருள் செலவு, மனோ கஷ்டம், வியாதி முதலியவைகளை கொடுப்பார்கள்.

## சூரிய அஷ்டவர்க்க பலன்

ரவி முதலிய நவக்கிரகங்களுடைய அஷ்ட வர்க்கங்களில் சனி சூரியகிரகத்தை (பிந்து இல்லாத வீட்டில்) அடைந்தால் அதிக சங்கடம். ரவி லக்கினத்தி லிருந்தாலும் சத்துரு ஸ்தானம் நீசராசி இவைகளிலிருந்தாலும் மூன்று இரண்டு பிந்துக்களுடைய வீட்டிலிருந்தாலும் வியாதி பீடை, ரவி, ஐந்து முதலாகிய பிந்துக்களோடு சேர்ந்து ஜன்ம லக்கினத்திலிருந்தாலும், சுவச்ச சுவக்ஷேத்திரங்களிலிருந்தாலும் குறைவற்ற அயிஸ்வரியம் பூரண ஆயுள்.

கேந்திரங்களாகிய ஒன்று, நான்கு ஏழு பத்து திரிகோணங்களாகிய ஐந்து ஒன்பது இவை ஆறு ஐந்து ஏழு பிந்துக்களிலிருந்து அதில் ரவியிருந்தால் முப்பது வருஷத்திற்குள் தகப்பனுக்கு மரண முண்டாகும். பிந்து சோதனையில் இரண்டு பிந்துக்களோடு புதன், சனி கேந்திரங்களிலிருந்தால் தகப்பனுக்கு விசேஷ அயிஸ்வரிய முண்டாகும். ரவி அஷ்டவர்க்கத்தில், சந்திரா அஷ்டவர்க்கத்தில் அவர்களுடைய ஸ்தானங்கள் பிந்து சூனியங்களாய் இருந்தால் அவர்களுடைய மாசங்கள் ராசிகள் அந்த ஜாதகத்திற்கு சுபகர்மங்களுக்கு ஆகாது. சந்திரன் ஒன்று, ஏழு, இரண்டு பிந்துக்களோடு சேர்ந்தாவது இரண்டு, மூன்று கிரகங்களோடு சேர்ந்தாவது ஜன்ம லக்கினத்தில் இருந்தால் ஏழு வருஷத்துக்கு மேல் ஜீவதிசை யிரா து.

## சந்திர அஷ்டவர்க்க பலன்



கேந்திரத்திலாவது திரிகோணத்திலாவது சந்திரனிருந்து நீச கிரகங்கள் சத்துரு கிரகங்கள்

சேர்ந்திருந்தாலும், நீச க்ஷேத்திரம் சத்துரு க்ஷேத்திரங்களி லிருந்தாலும், சனிகள் க்ஷீணத்தாலும், இரண்டு மூன்று பிந்துக்களோடு கூடி யிருந்தாலும் அந்த பாவம் பலன் தராது. நான்கு, ஏழு பிந்துக்களோடு கூடின திரிகோணங்களிலாவது, கேந்திரங்களிலாவது, லாப ஸ்தானங்களிலாவது, சந்திரன் பலிஷ்டனாக இருந்தால் அந்தப் பாவம் பலனும் விருத்தியும் உண்டாகும் எட்டு பிந்துக்களோடு கேந்திரங்களில் சந்திரனிருந்தால் கல்வி, பூரணாயுள், அயிஸ்வர்யம், கீர்த்தி உண்டாகும் உச்சஸ்தானம் ஸ்வட்சேத்திரம் நான்கு ஒன்று பத்து ராசிகளில் எட்டு பிந்துக்களோடு சந்திரனிருந்தால் பூரண தன முண்டாகும், தனுசு, மேஷம், சிங்கம், மகரம் லக்கினங்களில் நான்கு பிந்துக்களோடு கூடி அங்காரகன் இருந்தால் விசேஷ ராஜ்ய லாப முண்டாகும்.

## அங்காரக அஷ்டவர்க்க பலன்

பத்தாம் ராசி, ஜென்மராசியில் எட்டு பிந்துக்களோடு கூடி அங்காரகன் இருந்தால்; விசேஷ பூமி லாபமுண்டாகும் உச்ச க்ஷேத்திரத்திலாவது எட்டு பிந்துக்களோடு கூடி அங்காரகன் இருந்தால் விசேஷ ராஜ்ய லாப முண்டாகும்.

## புத அஷ்டவர்க்க பலன்

கேந்திர திரிகோணங்களில் எட்டு பிந்துக்களோடு புதனிருந்தால் வித்தியா லாபமுண்டு, ஸ்வ க்ஷேத்திரங்களில் ஒன்று, இரண்டு மூன்று பிந்துக்களோடாவது அதிக பிந்துக்களோடாவது சேர்ந்திருந்தால் அந்த பாவம் விருத்தி அடைந்த போதிலும் குறைவு அடைய புதன் அஷ்டவர்க்கத்தில் ஏந்த

ராசி பிந்துக்கள் அதிகமாக இருக்கிறதோ அந்தராசியில் வித்தியாரம்பம் செய்தால் சகல வித்தைகள் நன்ருய் வரும். புதன் அஷ்டவர்க்கத்தில் பிந்து இல்லாத ராசியில் கோசார ரீதியாக சனி வருங்காலத்தில் பிந்துக்கள், ஐஸ்வரியம், பங்காளிகள் இவர்களுக்கு க்ஷீணம் ஏற்படும்.

## குரு அஷ்டவர்க்க பலன்

குரு அஷ்டவர்க்கத்தில் அல்ப பிந்துக்களோடு கூடிய வீட்டில் குரு இருந்தால் அன்னியரால் எவ்வளவு ஒத்தாசை செய்து விருத்திக்குக் கொண்டு வந்த போதிலும் ஆனவிர்த்தி க்ஷீணமாய்விடும். ஐந்து முதலிய எண்ணுள்ள பிந்துக்களோடு கூடி ஆறு, பன்னிரண்டு, எட்டு இவைகளில் குரு இருந்தால், பூரண ஆயுள், சர்வகாரியங்களில் ஜெயம், ஐஸ்வரியமுண்டு. குரு அஷ்டவர்க்கத்தில் அதிக பிந்துக்களுடைய ராசியில் லக்கினமாகப் பார்த்து ஷேக முகூர்த்தம் செய்தால் உத்தம சந்தானங்களுண்டு. மேற்சொல்லிய அதிக பிந்துக்களுடைய ராசிக்கு நான்காவது ராசியில் கிரகமிருந்தால் நாற்கால் ஜீவ விருத்தி, தானியம், ஐஸ்வரியம் விருத்தியாகும். நீச ஸ்தானம் சத்துரு ஸ்தானம் மூடராசி இவைகளை விட்டுத் தனது உச்ச க்ஷேத்திரம், சுப க்ஷேத்திரம் கேந்திரம் தனது அம்சம் இவைகள் எட்டு பிந்துக்களோடு கூடி குரு இருந்தால் ராஜ்ய அதிகார முண்டாகும். மேற்சொல்லிய லட்சணங்களோடு குரு சேர்ந்து ஏழு பிந்துக்களோடு இருந்தால் அதிக சம்போக சுகம். விசேஷம் ஐஸ்வரியம் நல்ல சந்தானமும், குரு ஆறு பிந்துக்களோடு கூடியிருந்தால் வாகனாதி ஐஸ்வரியங்களும் ஐந்து பிந்துக்களோடு இருந்

தால் சுகுணமும், விவகார ஜயமும் நற்குணங்களும் உண்டாகும்.

## சுக்கிர அஷ்டவர்க்க பலன்

கேந்திர திரிகோணங்களில் எட்டு பிந்துக்களோடு சுக்கிரனிருந்தால் பொருள், ஆயுள், உத்தம குணம், வாகனுதி சுகங்கள், சம்போகங்கள் ஐஸ்வரியம் நவரத்தின லாபம் உண்டாகும் சுக்கிரன் நீசம் அஸ்தமனம் ஆறு எட்டு இவைகளி லிருந்தால் மேற் சொல்லியயோகங்கள் கெட்டுப்போகும். ஏழு பிந்துக் களுடைய ராசியில் திக் பாகத்தில் சுக்கிரனிருந்தால் விசேஷ சம்போக சுகமேற்படும்.

## சனி அஷ்டவர்க்க பலன்

சனி அஷ்டவர்க்கத்தில் திரிகோணபிந்து சூனிய மாக இருந்து அதில் சனி யிருந்தால் பொருள் செலவு, கண்டம் இவை ஏற்படும் ஒன்று, இரண்டு, ஏழு பிந்துக்களோடு கூடிய கேந்திர ராசியிலாவது தனது உச்சராசியிலாவது சனி யிருந்தால் அற்ப ஆயுசு. ஆறு ஐந்து பிந்துக்களோடு சேர்ந்த லக்கி னத்தில் சனி பலிஷ்டனுக இருந்தால் பிறந்தநாள் முதல் துக்கமுண்டா யிருக்கும் சனி சர ராசியில் அதிசலிஷ்டர்களான சத்துரு நீச கிரகங்களோடு கூடியிருந்தால் பந்துஜன க்ஷீணம். சுப கிரகங் ளோடு கூடிய க்ஷேத்திரத்தில் சனி யிருந்தால் பூரண ஆயுள் உண்டாகும். சனி மூடக்கிரமம், அதிக நீச கிரகங்களோடு சேர்ந்து நான்கு, ஐந்து கிரகங்க ளோடு சேர்ந்திருந்தால் கேவல விருத்தியினுல் ஜீவனம். எட்டு பிந்துக்களோடு சேர்ந்து ஜன்ம லக்கினத்திலிருந்தால் தனலாபமும் புத்தியில் பலம் சத்துரு ஜயமு முண்டு. ஏழு பிந்துக்களோடு கூடிய ராசியிலிருந்தால் பூமிலாபமுண்டு.

# மாயாஜால மர்மங்கள்

[நான்கு பாகங்கள் அடங்கியது]

## விலை ரூபா 3-00

இந்நூலில் வேண்டிய அதர்வண வித்தைகளும், மோடிவித்தைகளின் இரகசியங்களும், மற்றும் யாவரும் பிரமிக்கத்தக்க பல ஜாலங்கள், பல சித்துகள் விளையாடும் மை வகைகளும், அஞ்சன மைகளும், சிங்கிவித்தை, சொக்குப்பொடியின் சூக்ஷி, அஷ்டகர்ம கரு மை, மற்றும் முனிவர்கள், வராகி, ஜாலக்காள், குட்டிச்சாத்தான், யக்ஷிணி, அநுமான், மாடன், பகவதி, இருளி காட்டேரி வசியங்களும், அதற்கு வேண்டிய மந்திரங்களும் மற்றும் கோகர்ன கஜகர்ன இந்திர மகேந்திர ஜாலங்களும், குழந்தைகளின் சகல தோஷங்களுக்கும் விபூதிபிடித்தல், வேப்பிலை அடித்தல், பேய்பிசாசுகளை ஓட்டுதல், பில்லி சூனியங்களை அகற்றல், சதிபதிகள் பிரியாதிருத்தல், ஈடுமருந்தை முறித்தல், மற்றும் பாம்பு, தேள், நாய், பூனை, எலி இதுபோன்ற பல விஷஜெந்துக்களின் கடிவிஷங்களை யொழித்தல், இன்னும் ஜாலக்காளின் ஜெகஜால வித்தைகள், முள்ளின்மீது படுத்தல், நெருப்பை கையிலள்ளுதல், நெருப்பு மிதித்தல், நெருப்பு சட்டி ஏந்தும் சூக்ஷம், நெருப்பை மடியில் கட்டுதல், ஜலத்தின் மீது படுத்தல், ஜலத்திலுட்காருதல், வயிற்றில் ஈட்டி பாய்ச்சுதல, மோடியின் மும்முரமான வித்தைகள் வனவிலங்குகளை அடக்கி ஆளுதல், உடுக்கையை உடைத்தல், கன்றுகுட்டியின் தலை கத்துதல், உண்ணுவிரத மிருத்தல், ஆட்டுமந்தையை மாட்டுமந்தை யாக்குதல், அந்தரமாக நிற்குதல், குளத்தினுள் சென்று லிகிதம் எழுதுதல், பந்தயம் கெலித்தல், பாணு கொம்பு பாட்டு பாடுதல், இதுபோன்ற எண்ணிலடங்காத ஏராளமான ஜால வித்தைகள் இதில் அடங்கியுள்ளது.

கிடைக்கும் இடம் :—

ஆர். ஜி. பதி கம்பெனி,
4, வெங்கட்ராமய்யர் தெரு,
மின்ட்பில்டிங் போஸ்ட், சென்னை-1.

"மணீஸ்"

# பரிமள போதினி

என்னும்

# சுகந்த வர்க்க சாஸ்திரம்



கிடைக்குமிடம் :

திருவள்ளுவர் புஸ்தக நிலையம்

139, மூர்மார்க்கட், சென்னை-3

பதிப்புரிமை பெற்றது] 1968 விலை ரூ. 1—50

உ

"மணீஸ்"

# பரிமள போதினி

என்னும்

# சுகந்த வர்க்க சாஸ்திரம்

ஆசிரியர்:

"மணி"

பிரசுரம்:

அமரம்பேடு சிவப்பிரகாச முதலியார்

ஸ்ரீ சாய் சக்தி அச்சுக்கூடம்

24, தாண்டவராய பிள்ளை தெரு

சௌகார்பேட்டை (போஸ்டு) சென்னை - 1

பதிப்புரிமை பெற்றது] 1968 [விலை ரூ. 1-50

# பதிப்புரிமை அறிவிப்பு

இதனுல் சகல அச்சக உரிமையாளர்களுக்கும், பிரசுரகர்த்தர்களுக்கும் தெரிவிப்பது யாதெனில், 'மணீஸ் பரிமள போதினி' என்னும் இப் புஸ்தகத்தின் காப்பிரைட் உரிமையை சேலம், செவ்வாய்பேட்டை தனமணி அண்டு கம்பெனி உரிமையாளர் N. ஞான சிகாமணி என்பவரிடம் ரிஜிஸ்டர் செய்த பத்திரத்தின் மூலம் சகல உரிமையுடன் கிரயத்திற்கு பெற்றதை. என்னுல், எனது ஸ்ரீ சாய் சக்தி அச்சுக்கூடத்தில் பதிப்பித்து, வெளியிட்டு சர்க்கார் சட்டப்படி பதிப்புரிமை செய்திருக்கிறேன் என்பதை அறிவித்துக் கொள்ளுகிறேன். ஆகையால் எனது உத்தரவு இன்றி மேற்கண்ட புஸ்தகத்தை அச்சிடுதல் சட்டப்படி குற்றமாகும் என்பதையும் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

அ. சிவப்பிரகாச முதலியார்

## ஆக்கியோன் உரை

— o —

அன்புகெழுமிய நேயர்காள்!

அலைகடலை அடையாகக் கொண்ட இப்பரந்த பூவுலகின்கண், முற்றும் துறந்த முனிபூங்கவராலும் விரும்பிப் போற்றப்படும் பரிமள சுகானந்தத்தின் இனிய முறைபாடுதனை, இந்நூலினகத்தே செவ்வனே எடுத்தோதப்பட்டிருத்தலின் ஆண், பெண் அடங்கலாக அனைவர்க்கும் இந்நூல் பெரிதும் பயனளிக்குமென்பது வெளிப்படை

எனவே, இதனைக் கண்ணுரும் வாசக அன்பர்கள், கூறப்பட்டிருக்கும் முறைகளை உணர்ந்துள்ளத்திற்கொண்டு வழுவாது செய்து ஆனந்த பரவசருடராய் பலனடைய வேண்டுமென பன்முறையும் கேட்டுக் கொள்ளுகின்றனம்.

இங்ஙனம்,

உங்களன்பன்

"மணி"

# பொருளடக்கம்

— * —

## அத்தியாயம் 3

### சுகந்த தலைமுழுக்குத் தைல வகை



— * —

## அத்தியாயம் 4

### கூந்தல் தைல வகை

— * —

## அத்தியாயம் 5

## பன்னீர் வகை



— * —

## அத்தியாயம் 6

## திராவகம் இறக்கும் "வாலை" வகை

## அத்தியாயம் 7

## கூந்தல் எண்ணெய் வகை



— * —

## அத்தியாயம் 8

## முகவசீகர வகை



— * —

## அத்தியாயம் 9

## அத்தர் வகை



— * —

## அத்தியாயம் 10

## ஊதுவத்தி வகை

---

— * —

## அத்தியாயம் 11

## சாந்து, சாம்பிராணி வகை



— * —

## அத்தியாயம் 12

## சுகந்த மூக்குத்தூள் வகை

## அத்தியாயம் 13

## பரிமள தந்த சூரண வகை



— * —

## அத்தியாயம் 14

## சுகந்த சர்பத் வகை

சம்பூரணம்



அன்பே ஆண்டவன்

"மணீஸ்"

# பரிமள போதினி

— * —

## பரிமள பொடிவகை

### அத்தியாயம் 1.

### 1. பரிமள ஸ்நானத்தூள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கஸ்தூரி மஞ்சள் | 70 | கிராம் | சாம்பிராணி | 175 | கிராம் |
| வெட்டி வேர் | 140 | ,, | விலாமிச்சி வேர் | 140 | ,, |
| அகில் கட்டை | 140 | ,, | கோரைக்கிழங்கு | 140 | ,, |
| கிச்சிலி கிழங்கு | 105 | ,, | பூலாங் கிழங்கு | 105 | ,, |
| சந்தனம் | 140 | ,, | கோஷ்டம் | 140 | ,, |
| கார்போக அரிசி | 140 | ,, | ஏல அரிசி | 140 | ,, |
| தும்ராஷ்டம் | 140 | ,, | சோம்பு | 70 | ,, |

பச்சைப்பயறு ½ லிட்டர்

மேற்கண்டவைகளை வகை எடை தவறாது சேகரித்து உரலில் விட்டு நன்றாய் மசியும்படி இடித்து வஸ்திரகாயம் செய்து, காற்று புகாதவாறு ஓர் புட்டியில் அடைத்து வைத்துக்கொள்ளவும். தேவையானபொழுது தூளில் சிறிதெடுத்து, தண்ணீரில் நன்றாய் குழைத்து தேகமெங்கும் தாராளமாய்படும் வண்ணம் தேய்த்து ஸ்நானம் செய்தால், அந்நாள் முழுமையும் நறுமணம் கமழ்வ தன்னியில் சொரி, சிறங்கு, தேமல், முதலியன நீக்கி வேக்குரு, கற்றாழை நாற்றம் முதலியவை தென்படாதொழியும். மற்றும்,

மேனி சிவந்து அழகுக்கு இருப்பிடமாகும். இக்கு பெரும்பாலும் பெண்பாலார்க்கும், இளங்குழந்தைகட்கும், இன்றியமையாத தோர் ஸ்நான ஒளஷதமாதலால் ஒவ்வொரு குடும்ப பெரு மக்களும் இதனை அன்றாடக ஸ்நான காலத்தில் உபயோகித்து வரின் சாலவும் நன்மை பயக்குமென்பது துணிபு

## 2. பரிமள கதம்பப்பொடி

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சந்தனம் | 175 | கிராம் | கஸ்தூரி மஞ்சள் | 105 | கிராம் |
| கோஷ்டம் | 70 | ,, | கார்போக அரிசி | 105 | ,, |
| அன்னாசிப்பூ | 105 | ,, | கிச்சிலிக் கிழங்கு | 140 | ,, |
| சண்பகப்பூ | 70 | ,, | வெட்டிவேர் | 210 | ,, |
| விலாமிச்சிவேர் | 210 | ,, | லவங்கப்பட்டை | 35 | ,, |
| பச்சையிலை | 70 | ,, | தவனம் | 70 | ,, |
| பச்சை பயிறு | 140 | ,, | | | |

இவைகளை யாவையும் சின்னஞ் சிறு துண்டுகளாக்கி உரலில் விட்டு நன்ருய் இடித்து தூளாக்கி, ஜலித்து எடுத்துக்கொண்டு ஸ்நான காலத்தில் உபயோகித்துவரின், சகல சர்ம வியாதிகள் சூரியனைக்கண்ட பனியென நீங்குவதுடன் தேகாரோக்கியமும் கிட்டும்.

## 3. கதம்பமலர் ஸ்நானதூள்

மல்லிகை, முல்லை, இருவாட்சி, சண்பகம், ரோஜா முதலிய நறுமணமிகும் வண்ஜாதி புட்பங்களை சேகரித்து நிழலில் உலர்த்தி வைக்கவுப். தேவையான பூக்கள் சேர்ந்ததும்,

| | | |
|---|---|---|
| பூலாங் கிழங்கு | 280 | கிராம் |
| கோரைக் கிழங்கு | 280 | ,, |
| கார்போக அரிசி | 280 | ,, |
| கஸ்தூரி மஞ்சள் | 280 | ,, |
| சந்தனம் | 280 | ,, |
| வெட்டிவேர் | 280 | ,, |
| விலாமிச்சிவேர் | 280 | ,, |
| அகில் கட்டை | 280 | ,, |

இவைகள் யாவையும் ஒன்றுசேர நன்றாய் இடித்து, வஸ்திர காயம் செய்து, ஈரமற்றதோர் டப்பியில் அடைத்து வைத்துக் கொள்ளவும் தேவையானபோது இதில் சிறிதெடுத்து, தண்ணீரிட்டு குழைத்து, தேகமெங்கும் தடவி ஸ்நானம் செய்தால் தேகம் கலகலப்புகொண்டு மட்டற்ற ஆனந்தம் கொடுப்பதுடன், சந்துஷ்டியுடனிருக்கச் செய்து, மேனிகாந்தியை மிளிரச் செய்யுமென்பதில் ஐயமில்லை. ஆகவே, இது ஒவ்வொரு குடும்பத்தினிடையும் பிரகாசிக்க வேண்டிய ஸ்நான பொக்கிஷமாகும். மற்றும், இதனை தவராது காலை மாலை உபயோகித்துவரின், தேகத்தினிடைதோன்றி மறையும், தளும்புகள், தேமல்கள், முதலிய சரும வியாதிகள் ஆதவனைகண்ட காரிருள்போல் நீங்கும்.

## 4. சுகந்தஸ்நான மனோகரி

| | | |
|---|---|---|
| மகிழம்பூ | 280 | கிராம் |
| ரோஜாப்பூ | 280 | ,, |
| பச்சிலை | 70 | ,, |
| வாசனை புல் | 70 | ,, |
| கோஷ்டம் | 140 | ,, |
| வெட்டிவேர் | 140 | ,, |
| சந்தனம் | 140 | ,, |
| கிச்சிலிக் கிழங்கு (சீமை) | 140 | ,, |
| லவுங்கம் | 70 | ,, |
| ஏலக்காய் | 70 | ,, |
| கஸ்தூரி மஞ்சள் | 280 | ,, |
| லவுங்கபத்திரி | 70 | ,, |
| சர்க்கரை | 280 | ,, |
| லவுங்கப்பட்டை | 140 | ,, |

மேற்கண்டவைகளில் சர்க்கரை நீங்கலாக ஏனையவற்றை ஒன்றுசேர்த்து நன்றாய் இடித்து, தூளாக்கி ஜலித்து பின், சர்க்கரையை சேர்த்தெடுத்துக் கொள்ளவும். வெந்நீரிலோ அன்றேன், நதி, பொய்கையிலோ ஸ்நானம் செய்யும் காலத்து

இதனை சருமத்தில் படும்படி உபயோகித்தல் வேண்டும். மற்றும், எண்ணை குளிப்பிற்கு இதனை சீயக்காய் அறப்பு முதலியவைகளுடன் கலந்து உபயோகிப்பதவசியம். இதனால் தேகம் வனப்புகொண்டு சுகந்த மனத்துடன் என்றுமில்லா விதத்தில் புத்துயிர் பெற்று விளங்கு மென்பதில் தடையில்லை. இது பெண்மணி கட்கும் பாலர்கட்கு முகந்ததோர் ஸ்நான வரப்பிரசாதமாகும்

## 5. சிச்சாப் பொடி

| | |
|---|---|
| கிச்சிலிக் கிழங்கு | கோரைக் கிழங்கு |
| கிளியூரல் பட்டை | ஏலக்காய் |
| ஜாதிக்காய் | கசகசா |
| சந்தனம் | சாம்பிராணி |
| மருவு | பச்சப்பயிறு |
| மரிக்கொழுந்து | தாசி பத்திரி |
| ஜாதி பத்திரி | லவுங்க பத்திரி |
| வெட்டி வேர் | விலாமிச்சம் வேர் |
| மகிழம் பூ | அன்னுசிப் பூ |
| குலாப்பூ | |

இவைகளை வகைக்கு (70-கிராமாக) சேர்த்து இடித்து வஸ்திரகாயம் செய்து, ஸ்நான காலத்தில் உபயோகித்து வருவதினால் தேகமெங்கும் சுகந்த பரிமளம் வீசுவதுடன் சரும வியாதிகளும் வராது தடுக்கும். மேனிக்கு புத்துயிர் அளித்து அழகுபடச் செய்யும் இது, குழந்தைகளின் மிருதுவான சருமத்தை சொரி, சிறங்கு முதலிய கொடிய வியாதிகளினின்றும் தற்காக்கவேண்டி உபயோகிக்கத் தகுந்த திவ்ய மருந்தாகும்

## 6. வாசனை ஸ்நானத்தூள்

| | |
|---|---|
| கஸ்தூரி மஞ்சள் | கோறைக் கிழங்கு |
| சந்தனம் | பூலாங் கிழங்கு |
| பச்சிலை | சடாமாஞ்சி |
| கசகசா | வாய் விளக்கம் |
| கார்போக அரிசி | கிச்சிலிக் கிழங்கு |

## 2. சுகபால தூப கேசரி (குழந்தைகளுக்கு)

| | | |
|---|---|---|
| மட்டிப்பால் | 175 | கிராம் |
| நாட்டு சாம்பிராணி | 105 | ,, |
| சந்தனத் தூள் | 105 | ,, |
| அகில் கட்டை | 35 | ,, |
| வெட்டி வேர் | 35 | ,, |

மேற்கண்ட வற்றில் மட்டிப்பால் நீங்கலாக ஏனையவற்றை ஒன்று சேர்த்து இடித்து தூளாக்கியபின் மட்டிப்பாலை கலந்து நல்லபதத்தில் பத்திரப்படுத்தி வைத்துக்கொள்க பின், சிசுவிற்கு ஸ்நானம் செய்வித்து செவ்வனே தலைதுவட்டினதும், தணல் அடுப்பிலிருந்து, பெரு நெருப்பு துண்டுகளை, தூபகலசத்தில் கொண்டு, இத்தூளில் சிறிதளவு தூவி, தூபம் சிரசின் நாலாபக்கங் களிலும், நன்றென படும்படி காண்பிக்க, சிறிது நேரத்தில் கூந்தல் பூப்போன்று உலர்ந்து, குழந்தைக்கு மட்டற்ற ஆனந் தத்தை யூட்டி, புளகாங்கித மடையச் செய்யும். பொதுவாக, சிறு குழந்தைகள் ஸ்நானம் செய்வித்த சிறிது நேரத்திற்குள் கண்ணயர்ந்து வீடுவது இயற்கையெனினும், இவ்வாறு செய்த வால், குழந்தைகள் அதி சீக்கிரம் துயில் கொள்வதன்னியில், பரிமள காந்தியால், பெற்ருேரின் பிரீதிக்கு பாத்திரராவா ரென்பது கண்டறிந்த அனுபவம். ஆகவே, ஒவ்வொரு பெற்ருே ரும் இதனை கண் காணித்தல் அவசியம்.

## 3. கலவை கூந்தல் தூபம்

| | | |
|---|---|---|
| லவங்கபத்திரி | | |
| மட்டிப்பால் | 35 | கிராம் |
| சந்தனத் தூள் | 70 | ,, |
| அகிற் கட்டை | 140 | ,, |
| ஒஸ்தி சாம்பிராணி | 105 | ,, |
| அம்பராஷ்டம் | 175 | ,, |
| ஏலம் | 18 | ,, |
| | 18 | ,, |

மேற்கண்ட யாவையையும் ஒன்றாக சேர்த்திடித்து தூள் செய்து, ஈரமற்றதோர் சிசாவில் சேமித்து வைத்துக்கொள்ளவும். தேவையானபோது இப்பேர்கொண்ட தூளில் சிறிதெடுத்து, தணல் கட்டிகள் நிறம்பிய தூபகலசத்தின் எல்லாப் பக்கங்களிலும் நன்றெனபடும்படி தூவி, வெளிக்கிளம்பும் நறுமணம் கமழும் புகைப்படலத்தின் கண் ஊடுருவ கேசத்தை கோதிவிட்டு தூபம் பிடிக்கில் கூந்தல் ஈரமற்று, மலர்ந்து நல்வாசனை மிகுந்து விளங்கும். இதனால், சிரசிற்கு வசீகரதோற்றம் ஏற்படுவதல்லாமல் தலைமுழுகியதாலுண்டான அசதிகுன்றி, சுருசுருப்புடன் கூடிய தேகாரோக்கியத்துட னிருக்கச்செய்யும்.

## 4. பரிமள மனோகரி (அல்லது) தசாங்கம்

| | | |
|---|---|---|
| ஓஸ்தி பளிங்கு சாம்பிராணி | 35 | கிராம் |
| அகில்கட்டை தூள் | 35 | ,, |
| சுகந்த சந்தனத் தூள் | 35 | ,, |
| லவங்கம் | 35 | ,, |
| லவங்கப்பட்டை | 35 | ,, |
| ஏல அரிசி | 35 | ,, |
| மைசாட்சி | 35 | ,, |
| ஜடாமாஞ்சில் | 35 | ,, |
| ஜாதிக்காய் | 35 | ,, |
| சம்பங்கி மொக்கு | 35 | ,, |

"தசம்" என்றால் பத்து. ஆகவே, மேற்குறிக்கப்பட்டுள்ள பத்துவகை வாசனை திரவியங்களையும் சுத்தமாக, பதம் தவராத விதத்தில் ஒன்று சேர்த்து காட்டெருமைப் பால் சேர்க்கையுடன் ஒருங்கு கூட்டி சிசாவில் அடைத்து வைத்திருந்து, தேவையான போது, உபயோகிக்கவும். இது சுகந்த பரிமளமளிக்கும் மனோகர திரவிய மாகையால் செட்டாக உபயோகப்படுத்தல் அவசியத்திலும் அவசியம். மனம் உற்சாகமடைவதுடன், திரேக சுகமும் நறுமணமும் கமழும், வதன காந்தியு முண்டாகும்.

## 5. சுகந்த வர்க்க கேச தூபம்

| | | |
|---|---|---|
| அன்னுசிப்பூ | 18 | கிராம் |
| ஜாதிபத்திரி | 35 | ,, |
| அகிற்கட்டை | 35 | ,, |
| சிலாரசம் | 35 | ,, |
| பளிங்கு சாம்பிராணி | 35 | ,, |
| சம்பங்கி மொக்கு | 35 | ,, |
| குலாப்பூ | 35 | ,, |
| லவங்கப்பட்டை | 35 | ,, |
| சந்தனத் தூள் | 35 | ,, |
| ஏலக்காய் | 35 | ,, |

மேற்கண்டவைகளை இடித்து தூள் செய்து டப்பியில் வைத்துக்கொண்டு, ஸ்நானம் முடிந்தவுடன் கேசத்தை கோதி விட்டு, இத்தூளினுல் கூந்தலுக்கு தூபம் போட்டால் மனதிற்கு மிகுந்த ஆனந்தமும் திரேகத்திற்கு ஆரோக்கியமும் உண்டாகும்.

## 6. பரிமள கேச தூபம் (வேறு வகை)

| | | |
|---|---|---|
| மட்டிப்பால் | 70 | கிராம் |
| பளிங்கு சாம்பிராணி | 105 | ,, |
| அகில் கட்டை | 70 | ,, |
| சுகந்த சந்தனத் தூள் | 140 | ,, |
| லவங்கப் பத்திரி | 35 | ,, |
| சாந்து | 35 | ,, |
| தும்பராஷ்டிரம் | 35 | ,, |

மேற்கண்டவைகளை இடித்து தூளாக்கி காற்று புகாததோர் டப்பியில் அடைத்து, ஈரமில்லாததோர் இடத்தில் வைத்து வைக்கவும். ஸ்நானம் முடிந்ததும், இச் சிரேஷ்ட தூளினை நெருப்பிலிட்டு கூந்தலுக்கு புகை பிடிப்பதால் தொத்து வியாதிகள் அணுகாது, திரேக ஆரோக்கியமும், மன சந்துஷ்டியும், ஆனந்தமும் கிட்டும்.

## 7. சுகந்தல் தூப சிரேஷ்டணி

| | | |
|---|---|---|
| சந்தனத் தூள் | 35 | கிராம் |
| அகிற்கட்டை தூள் | 35 | ,, |
| லவங்கம் | 35 | ,, |
| ஏலம் | 35 | ,, |
| ஜாதிக்காய் | 35 | ,, |
| ஜடமாஞ்சில் | 55 | ,, |
| பச்சை கற்பூரம் | 18 | ,, |

மேற்குறிக்கப்பட்டுள்ளவைகளை ஒருங்கு சேர்த்து தூளாக்கி கூந்தலுக்கு தூபம் போடவும். இதனால், மனம் உற்சாகமடைவதுடன், திரேக சுகமும் நறுமணம் கமழும் வதன காந்தியுமுண்டாகும்.

# சுகந்த தலைமுழுக்குத் தைல வகை

## அத்தியாயம் 3

## 1. வெட்டி வேர் தைலம்

| | | |
|---|---|---|
| வெட்டி வேர் | 560 | கிராம் |
| விலாமிச்சி வேர் | 560 | ,, |
| அகிற் கட்டை | 560 | ,, |
| சந்தனக் கட்டை | 560 | ,, |
| தேவதாரம் | 560 | ,, |
| கஸ்தூரி மஞ்சள் | 280 | ,, |
| பூலாங் கிழங்கு | 280 | ,, |
| மயிர் மாணிக்கம் | 280 | ,, |
| கோஷ்டம் | 280 | ,, |
| கிராம்பு | 280 | ,, |
| ஜாதிக்காய் | 280 | ,, |
| செஞ் சந்தனம் | 280 | ,, |

| | | |
|---|---|---|
| வால் மிளகு | 280 | ,, |
| மிளகு, சீரகம் | 140 | ,, |
| அதிமதுரம் | 70 | ,, |

மேற்கூறப்பட்ட கடை சரக்குகளை வகை எடை தவராது நிறுத்தெடுத்துக்கொண்டு, முதல் ஐந்தினை உரலிலிட்டு நன்ருய் மசியும்படி இடித்து, வாயகன்றதோர் பாத்திரத்தில் சுமார் 20 லிட்டா ஜலத்தில் ஏறக்குறைய 12 மணி நேரம் ஊரவைத்து பின், அடுப்பேற்றி, கமலாக்கினியாக எரித்து பாதியாக சுண்ட வைக்கவும் அவ்வாறு சுண்டினதும், பின் கூறிய எட்டினையும் ஒன்றிரண்டாகத் துண்டித்து கலந்து, நிதானமாக எரித்து, செம்மை நிறத்தில், நல்ல எள்ளெண்ணெய், பசுவின்பால் வகைக்கு நான்கு லிட்டர் சேர்த்து, எஞ்சிய சீரகம், மிளகு, அதிமதுரம் முதலியவற்றை கூட்டி, விடாது துளாவிக்கொண்டேயிருந்து, நீர்வற்றி மேலெழும்பும் சுகந்த தைலத்தை வடித்து, ஆறினதும் புட்டியிலடைத்து கார்க்கிட்டு வைத்துக்கொள்ளவும். வேளா வேளைகளில் மேற்கண்ட தைலத்தால் ஸ்நானம் செய்துவர சிரரோக மனைத்தும், கடிதின் நீங்குவதன்னியில் வண்டுகடி முதலியன தலைகாட்டா தொழியும். ஆகவே, இதனை ஆண், பெண், அனைவரும் ஸ்நான காலத்தில் உபயோகிப்பது சாலவும் நன்று.

## உ. சந்தனாதித் தைலம்

| | | | |
|---|---|---|---|
| சந்தனம் | 280 கிராம் | தேவதாரம் | 280 கிராம் |
| அக்கிரகாரம் | 280 ,, | அகிற்கட்டை | 280 ,, |
| வெட்டிவேர் | 280 ,, | வில்வ வேர் | 280 ,, |
| பாதிரி வேர் | 280 ,, | கோஷ்டம் | 280 ,, |

விலாமிச்சி வேர் 280 கிராம்

மேற்கண்ட ஒன்பதினையும் உரலிலிட்டு நன்ருய் இடித்து சுமார் 10 படி ஜலத்தில் ஒருநாள் வரை ஊரவைத்து. பின் அடுப்பேற்றி காய்ச்சி பாதியாக சுண்டினதும்,

| | | |
|---|---|---|
| நல்ல பசுவின் பால் | 2 | லிட்டர் |
| நெல்லிப் பால் | 2 | ,, |
| பசுநெய் | 2 | ,, |
| தென்னம்பால் | 2 | ,, |
| நல்ல எள்ளெண்ணை | 2 | ,, |

இவைகளை ஒன்றுகூட்டி கமலத்தியில் கியாழமிட்டு நல்ல மெழுகு பதத்தில் எண்ணையை வடித்து ஓர்கல் ஜாடி அல்லது சீசாவில் கார்க்கிட்டு வைத்துக் கொண்டு கிரமமாக, வாரம் தவராது தலைமுழுகிவரின் மேக வியாதிகள் கதிரோனைக் கண்ட பனியென நீங்குவதுடன் சகல பிணிகளும் ஒழிந்து, இன்புற்று வாழ்வதில் என்ன தடை?

## 3. சந்தனாதித் தைலம் (வேறு வகை)

| | | |
|---|---|---|
| சந்தனம் | 350 | கிராம் |
| வெட்டிவேர் | 350 | ,, |
| விலாமிச்சம் வேர் | 350 | ,, |
| நன்னாரி வேர் | 350 | ,, |
| வில்வவேர் | 350 | ,, |
| அகில் கட்டை | 175 | ,, |
| தேவதாரம் | 175 | ,, |
| அதிமதுரம் | 175 | ,, |
| கோஷ்டம் | 175 | ,, |
| லவுங்கம் | 70 | ,, |
| கருவாப்பட்டை | 70 | ,, |
| லவுங்கப்பட்டை | 70 | ,, |
| லவுங்கபத்திரி | 70 | ,, |
| தண்ணீர்விட்டான் கிழங்கு | 70 | ,, |
| அமுக்கனாங் கிழங்கு | 70 | ,, |

மேற்கண்டவைகளை வகை எடை தவராது எடுத்துக்கொண்டு நன்றாய் இடித்து 20 லிட்டர் நீரில் ஊரவைத்து அடுப்பேற்றி, நாலில் ஒன்றாய் வற்றவைத்து, வடித்துக்கொண்டதும்,

| | |
|---|---|
| நெல்லிக்காய் சாறு | 2 லிட்டர் |
| பொன்னாங்கண்ணி சாறு | 2 ,, |
| கற்பூரவள்ளிச் சாறு | 2 ,, |
| ஆவின் பால் | 4 ,, |
| நல்லெண்ணெய் | 4 ,, |

இவைகளை ஒன்று சேர கலந்து, கமலாக்கினியாக எரித்து பாதியாக சுண்டினதும்,

| | |
|---|---|
| பூலாங்கிழங்கு | 35 கிராம் |
| கஸ்தூரி மஞ்சள் | 35 ,, |
| ஜாதிக்காய் | 12 ,, |
| மாசிக்காய் | 12 ,, |
| கார்போக அரிசி | 12 ,, |
| ஜாதிபத்திரி | 12 ,, |
| ஏலம் | 12 ,, |
| ஓமம் | 12 ,, |
| வேம்பாடம் பட்டை | 12 ,, |
| சீரகம் | 12 ,, |
| சண்பகப்பூ | 12 ,, |

இவை யாவையும் பால் விட்டரைத்து கலந்து, நீர்வற்றக் காய்ச்சி தைலத்தை வடித்து வைத்துக்கொள்ளவும். இதனல் வாரா வாரம் தலைமுழுகி வந்தால் கண், செவி, கபாலம் முதலிய வற்றின் நோய்களை நீக்கி க்ஷயம், மேகம் முதலியவற்றையும் அணுகாது தடுக்கும்.

## 4. சந்தனதித் தைலம் (சுலபமான முறை)

| | |
|---|---|
| வெட்டிவேர் | 350 கிராம் |
| விலாமிச்சம் வேர் | 175 ,, |
| சந்தனத்தூள் | 175 ,, |
| நன்னாரிவேர் பட்டை | 70 ,, |
| நல்லெண்ணெய் | 2 லிட்டர் |

மேற்கண்டவற்றுள் முதல் நான்கினை உரலிலிட்டு இடித்து சுமார் 4 லிட்டர் ஜலத்தில் ஊறவைத்து, பின், அடுப்பேற்றி, ஆறில் ஒரு பங்காக சுண்டவைத்து எண்ணெயை வடித்து எடுத்துக்கொண்டு காலா காலங்களில் தலைமுழுகிவர தேகாரோக்கியம் கொண்டு மேக வியாதிகள் அகலும்.

## 5. மேக சூட்டிற்கு முழுக்குத் தைலம்

| | |
|---|---|
| வெட்டிவேர் | 280 கிராம் |
| விலாமிச்சி வேர் | 280 ,, |
| அகில் கட்டை | 280 ,, |
| மிலாக்கட்டை | 280 ,, |
| கொடுவேலி | 280 ,, |

மேற் கூறப்பட்டவைகளை இடித்துத் தூளாக்கிச் சுமார் 12 லிட்டர் ஜலத்தில் ஒருநாள் பூராவும் ஊறவைத்து, பின் அடுப்பேற்றி கமலாக்கினியாக எரித்து, பாதியாகச் சுண்ட வைக்கவும் அவ்வாறு சுண்டினதும் கரிசலாங்கண்ணிச் சாறு, ஆவின் பால் வகைக்கு நான்கு லிட்டர் சேர்த்து மறுமுறை அடுப்பேற்றி நிதானமாக எரியவிடவும். பின்,

| | | | |
|---|---|---|---|
| கஸ்தூரி மஞ்சள் | 140 கிராம் | சதகுப்பை | 140 கிராம் |
| கிராம்பு | ,, | வால்மிளகு | ,, |
| அதிமதுரம் | ,, | ஜாதிக்காய் | ,, |
| கோரைக்கிழங்கு | ,, | ஜாதிபத்திரி | ,, |

இவை யாவையும் மேற்கூறியவைகளுடன் ஒன்றுபட சேர்த்து அடுப்பேற்றி மெழுகுபதத்தில் (தைலத்தில் சேர்க்கப் படும் சூர்ணங்கள் யாவும், ஒன்று சேர்ந்து மெழுகுபோல் வரும் சமயம் 'மெழுகுபதம்' எனப்படும்) எண்ணெயாக வடித்துக் கொள்ளவும் இப்பேர்கொண்ட தைலத்தில் வேளாவேளைகளில் ஸ்நானம் செய்து வந்தால் சகல மேக வியாதிகள் நீங்குவதுடன் சிர ரோகங்களும் மாயமாய் மறையும். மற்றும் விடாது உபயோகித்துவரின் சிரம் குளிர்ச்சியடைந்து. கேசம் விர்த்தியாவதுடன் சுண்டு, பொடுகு முதலியனவின்றி அழகு ததும்பும் மிருது தன்மையுடனிருக்குமென்பதில் ஐயமில்லை.

# கூந்தல் தைல வகைகள்

## அத்தியாயம் 4

### 1. ரோஸ் கூந்தல் சுருட்டும் தைலத் துளி

| | |
|---|---|
| ஆலிவ் ஆயில் | 56 கிராம் |
| ஸ்விட் ஆயில் | 56 ,, |
| ரோஸ் மெரி ஆயில் | 28 ,, |
| ஆரிகானம் | 28 ,, |
| ரோஸ் அத்தர் | 28 ,, |

மேற்கண்ட பஞ்ச தைலத்தையும் ஒருங்கு சேர்த்து இரண்டு நாள் அப்படியே வைத்திருக்கவும் பின், தேவையானபோது பாட்டிலை மேலும் கீழுமாக குலுக்கிவிட்டு உபயோகப்படுத்திக் கொள்ளவும்.

### 2. கூந்தல் வளர்ச்சிக்கு உறுக்கு தேங்காய் எண்ணெய்

தேங்காய் எண்ணெயானது எல்லாவிதத்திலும் கூந்தலுக்கு சிரேஷ்ட தைலமென அனுபவ பூர்வமாய் கருதுகின்றமையால் அதனை வீட்டிலேயே, சிறிதும் தண்ணீர் கலப்பின்றி சுலபமாய் தயாரிக்கும் விதத்தினை ஈண்டு கூறலாம்

நன்குய் முற்றினதும், சதைப்பற்றுள்ளதுமான 12 தேங் காய்களைக் கொண்டுவந்து திருகி பால் பிழிந்து வைத்துக் கொள்ளவும். அதனை வாயகன்றதோர் வானலிவிட்டு, அடுப் பேற்றி, நன்குய் சுண்டும்வரை விடாது கிளறிக்கொண்டே வரவும் பால் சுண்ட, சுண்ட அடுப்பின் தணலை சிறிது சிறிதாக மட்டுப் படுத்திக்கொண்டு வருதல் நலம் அவ்வாறு செய்யா விடில் பால் அடிப்பிடித்துக் கொண்டுவிடும் கடைசியாக, பாலி லிருந்து எண்ணெய் கசிந்து சக்கையானது குழம்பாக மாறி சற்று சிவந்த நிலையில் வாணலின் அடிபாகத்தில் தங்கும் - அதுகாலை, மேல் ததும்பி மிதந்து நிற்கும் எண்ணெயை (சக்கை கலக்கா

# கூந்தல் தைல வகைகள்

## அத்தியாயம் 4

### 1. ரோஸ் கூந்தல் சுருட்டும் தைலத் துளி

| | |
|---|---|
| ஆலீவ் ஆயில் | 56 கிராம் |
| ஸ்விட் ஆயில் | 56 ,, |
| ரோஸ் மெரி ஆயில் | 28 ,, |
| ஆரிகானம் | 28 ,, |
| ரோஸ் அத்தர் | 28 ,, |

மேற்கண்ட பஞ்ச தைலத்தையும் ஒருங்கு சேர்த்து இரண்டு நாள் அப்படியே வைத்திருக்கவும் பின், தேவையானபோது பாட்டிலை மேலும் கீழுமாக குலுக்கிவிட்டு உபயோகப்படுத்திக் கொள்ளவும்.

### 2. கூந்தல் வளர்ச்சிக்கு உறுக்கு தேங்காய் எண்ணெய்

தேங்காய் என்னெயானது எல்லாவிதத்திலும் கூந்தலுக்கு சிரேஷ்ட தைலமென அனுபவ பூர்வமாய் கருதுகின்றமையால் அதனை வீட்டிலேயே, சிறிதும் தண்ணீர் கலப்பின்றி சுலபமாய் தயாரிக்கும் விதத்தினை ஈண்டு கூறலாம்

நன்ருய் முற்றினதும், சதைப்பற்றுள்ளதுமான 12 தேங் காய்களைக் கொண்டுவந்து திருகி பால் பிழிந்து வைத்துக் கொள்ளவும். அதனை வாயகன்றதோர் வானலிவிட்டு, அடுப் பேற்றி, நன்ருய் சுண்டும்வரை விடாது கிளறிக்கொண்டே வரவும் பால் சுண்ட, சுண்ட அடுப்பின் தணலை சிறிது சிறிதாக மட்டுப் படுத்திக்கொண்டு வருதல் நலம் அவ்வாறு செய்யா விடில் பால் அடிப்பிடித்துக் கொண்டுவிடும். கடைசியாக, பாலி லிருந்து எண்ணெய் கசிந்து சக்கையானது குழம்பாக மாறி சற்று சிவந்த நிலையில் வாணலின் அடிபாகத்தில் தங்கும் அதுகாலை, மேல் ததும்பி மிதந்து நிற்கும் எண்ணெயை (சக்கை கலக்கா

## 4. கேச வளர்ச்சித் தைலம்

| | | |
|---|---|---|
| வெட்டிவேர் | 350 | கிராம் |
| சந்தனத் தூள் | 350 | ,, |
| மஞ்சட்டி | 350 | ,, |
| சிந்தில் கொடி | 350 | ,, |

மேற்கண்ட நான்கினையும் நன்ருய் மசியும்படி இடித்து சுமார் 10 லிட்டர் ஜலத்தில் போட்டு அடுப்பேற்றி காய்ச்சி ஆறில் ஒன்ருய் வற்றினதும்,

| | | |
|---|---|---|
| நல்லெண்ணெய் | 2 | லிட்டர் |
| ஆவின்பால் | 2 | ,, |

இவை இரண்டையும் கலந்து, அடுப்பேற்றி கமலாக்கினி யாக எரித்து சரியான பக்குவத்தில்,

| | | |
|---|---|---|
| நகம் | 18 | கிராம் |
| பூலாங் கிழங்கு | 18 | ,, |
| சென்பக மொக்கு | 18 | ,, |
| மைசூர் சந்தன தூள் | 18 | ,, |

மேற்கண்டவைகளை தூள் செய்து போட்டு நன்ருய் கலக்கி விட்டு சரியான மெழுகு பதத்தில் எண்ணெயை வடித்து எடுத்துக் கொள்ளவும் இது சிவந்த நிறமுடையதாகவும் துல்லிய மணம் கொண்டதாகவுமிருக்கும் இது தேக காந்தியை மிளிரச் செய்வ துடன் சிரசின்கண் தோன்றும் பேன், பொடுகு, முதலியவற்றை நீங்கி முகதேஜஸ் உண்டாக்கும்

## 5. கேச சிரேஷ்டனித் தைலம்

| | | |
|---|---|---|
| அகத்திக் கீரைச்சாறு | 1 | லிட்டர் |
| எள்ளெண்ணை | 1 | ,, |

இவையிரண்டையும் ஒன்றுபட கலந்து, அடுப்பேற்றிக் காய்ச்சவும். சரியான பதம் வந்ததும்,

| | | |
|---|---|---|
| நெல்லி முள்ளி | 1 | லிட்டர் |
| கடுக்காய் தோல் | 1 | ,, |
| தானிக்காய்த் தோல் | 1 | ,, |
| அரப்பொடி | 1 | ,, |
| கசகசா | 1 | ,, |

இவைகளை பால் விட்டரைத்து கலந்து நல்ல மெழுகு பதத்தில் எண்ணெயை வடிகட்டி வைத்துக்கொள்ளவும். இது கூந்தலுக்கு நல்ல கருமை நிறத்தையும் குளிர்ச்சியையும் நல் மணத்தையும் தந்து சொறி, சிறங்கு முதலியவைகளை சிதரடிக்கும் குணமுடையது.

## 6. பரிமள கூந்தல் தைலம் (சுலபமான முறை)

½ லிட்டர் தேங்காய் எண்ணெயை இலேசாகக் காய்ச்சி, சூடுண்டாகும் சமயத்தில் 35-கிராம் அல்கனெட்ருட், பொடித்துப்போட்டு, இறக்கி, ஆறினதின்பின், வடிகட்டிக்கொண்டு, அதில், அவரவர்களுக்கு பிரியமான ரோஸ், மல்லிகை, கஸ்தூரி, சண்பகம், முதலிய வாசனை சென்டுகளை தேவையான விகிதத்தில் கலந்து, பாட்டிலில் அடைத்து, நன்கு குலுக்கிவிட்டு அப்போதைக்கப்போது உபயோகித்து வரவும். இதுவும் கூந்தல் வளர்ச்சியின்கண், ஒருவாறு குணம் கொடுக்கக்கூடிய தகையால் சுலபமாய் தயாரித்து உபயோகித்து வரலாம்.

குறிப்பு:—தேங்காய் எண்ணெ தண்ணீர் கலப்பில்லாததாக விருத்தல் நலம் இல்லையேல் சிறிது அதிகமாகக் காய்ச்சி நீரை முற்றும் முடிய நீக்குதல் அவசியம்.

## 7. அழகுக்கூந்தல் தைலம்

| | | |
|---|---|---|
| சுகந்த பன்னீர் | 168 | கிராம் |
| கிளிஸரைன் | 56 | ,, |
| ஆலிவ் ஆயில் | 2 | லிட்டர் |
| ரோஜா அத்தர் | 7 | கிராம் |
| ரோஸ்மெரி ஆயில் | 7 | ,, |

பன்னீரில் கிளிஜரைனைக் கரைத்துக்கொண்டு, சிறிது சூடுடன், அபிஷேகத்தைலமென்னும் ஆலிவ் ஆயிலையும், ரோஜா அத்தர் முதலிய வற்றையும் கலந்து, வர்ணத்திற்காக ஒரு துண்டு அலகனெட் வேரையும் சேர்க்கவும். இது கூந்தலுக்கு பலத்தையும் அழகையும் கொடுப்பதன்னியில், சொற்ப சிலவில் சுலபமாகவும் தயாரிக்கலா மெனத் தெரிகிறது.

## 8. நெல்லிக்காய்த் தைலம்

| | |
|---|---|
| கரிசிலாங்கண்ணி | 1 பங்கு |
| ஆத்நியிலை (கொஞ்சம்) | |
| பச்சை நெல்லிக்காய் | 1 பங்கு |

இவை மூன்றையும் நன்ருய் இடித்து அப்பட்டமான சாராக எடுத்துக்கொண்டு, அத்துடன் காய்ந்த முள்ளியைகொட்டி கஷாயமாக காய்ச்சி விட்டுக் கொள்ளவும்.

பின், நல் பதத்தில், கொஞ்சம் விளக்கெண்ணையும் சமபங்கு நல்லெண்ணை அல்லது தேங்காய் எண்ணையும் கலந்து, நாலைந்து நாட்கள் சூரிய வெப்பத்தில் வைத்தெடுக்கவும். பிறகு, 1 லிட்டர் பசுவின் பாலுடன் வாசனைக்காக, சிறிது சந்தனம், 70 கிராம் சண்பகமொட்டு கலந்து காய்ச்சவும் காய்ந்த எண்ணையில் திரியை நனைத்து விளக்கேற்றினல், பட, படா, என்ற சப்தமில்லாத வகையில் எண்ணையை இறக்கி வைத்துக் கொள்ளவும் நன்ருய், ஆறினதும், சீசாவில் அடைத்து வைத்துக்கொண்டு, தேவையானபோது கூந்தலுக்கு தடவி, வாரி முடித்துக்கொள்ளவும். இது கூந்தலுக்கு கருநிறத்தைக் கொடுப்பதுடன், நேத்திரத்திற்கு குளிர்ச்சியைத் தந்து, கூந்தலையும் வளர்ப்பிக்கும். ஆகவே, இதனை சர்வசாதாரணமாய் யாவரும் உபயோகித்து வரலாம்.

## 9. நரை மயிர் கருக்கும் தைலம்

முற்றின புன்னைக்கொட்டையின் பருப்பைகொண்டு வந்து, நாலைந்து பாகமாக்கி, வாணலியிலிட்டு கருப்பாகும்வரை வருத்

தெடுத்து, அம்மியில் வைத்தரைத்து, பிழிந்து எண்ணெயெடுத்துக் கொள்ளவும். பின், தேவையான கரிசலாங்கண்ணியை நன்றாக அரைத்து, அடை தட்டி, காய்ந்ததும், மேற்படி எண்ணெயில் ஊறச்செய்து, வேண்டிய தேங்காய் எண்ணெ கலந்து உபயோகிக்கவும்

குறிப்பு:—புன்னைகொட்டை எண்ணெயை மலையாள தேசத்தில் விளக்கு எரிக்க உபயோகித்து வருகின்றனர்.

## 10. நரை மயிர் கருக்கும் தைலம் (வேறு விதம்)

| | | |
|---|---|---|
| சில்வர்நைட்ரேட் | 28 | கிராம் |
| வாட்டர் அமோனியா | 112 | ,, |
| சுத்த ஜலம் | 54 | ,, |

சில்வர் நைட்ரேட்டை குளிர்ந்த சுத்த ஜலத்தில் நன்றாய்க் கலந்து, பின் வாட்டர் அமோனியாவைக் கூட்டி, நீலநிற பாட்டல்களில் சேமித்துக்கொள்ளவும். தேவையானபோது, நரைத்த மயிரை சுத்த ஜலத்தினால் திறம்படக் கழுவி, எண்ணெ முதலியவற்றை அறவே நீக்கிவிட்டு, பிரஷ்கொண்டு, தகுந்த விதத்தில் நரைத்த மயிருக்கு தடவவும். தடவிய மாத்திரத்தில் ரோமம் சாயமேறிகருப்பாகிவிடும். காய்ந்ததும், எண்ணெ முதலியன தடவி கூந்தலை வாரி முடித்துக்கொள்ளவும்.

குறிப்பு:—டை கலப்பை, ரோமத்திற்கு தடவுவதற்கு முன்னர், மயிரின்கண், எஞ்ஜி நிற்கும் எண்ணெப் பசையை அறவே நீக்குதல் அவசியம். இல்லையேல், கலப்பானது மயிரில் நன்றாய் பதிய இடமிராது. மற்றும், கூந்தலுக்கு டை கலப்பை அதி ஜாக்கிறதையுடன் தடவுதல் வேண்டும். இல்லாவிடின், ஆங்காங்குபட்டு, கரை ஏற்பட இடமுண்டாகும்.

## 11. நரை மயிர் கருக்கும் தைலம் (மற்றொரு விதம்)

| | | |
|---|---|---|
| நைட்ரேட் ஆப் காப்பர் | 2 | கிராம் |
| நைட்ரேட் ஆப் சில்வர் | 196 | ,, |

| | | |
|---|---|---|
| சுத்த ஜலம் | 168 | கிராம் |
| அமோனியா ஜலம் | 252 | ” |

மேற்கண்டவைகளை தண்ணீரில் முற்றும் முடிய கரைத்து, அமோனியாவை, ஜாக்கிறதையாக, டி கலப்பு கலப்பு சரியாக வரும்வரை கொஞ்சம், கொஞ்சமாக ஊற்றிக் கலக்கவும். இந்த கலப்பு, சரியானபடி கூந்தலுக்கு வினியோகிக்கப்பட்டால் அருமையான கருப்பு நிறமாகிவிடுமெனத் தெரிகிறது

குறிப்பு:—மேற்படி கலப்பை நரை மயிருக்கு ஜாக்கிறதை யுடன். சிறியதோர் பிரஷ்கொண்டு கொஞ்சம் கொஞ்சமாக தடவுதல் வேண்டும் மட்டுக்கு மிஞ்சி உபயோகித்தால், எஞ்சி நிற்கும் துளிகள் கீழ் விழ்ந்து, ஆடையாபரணாதிகளையோ அன்றேல், பிரிதொரு இடத்தையோ கரைப்படுத்தும். ஆகவே, நிதானமாய் உபயோகித்தலே சிரேஷ்டம்.

## 12. நேத்திரத்திற்கு சிரேஷ்ட தைலம்

| | | |
|---|---|---|
| தண்ணீர் கலக்காத பசும் பால் | 1½ | லிட்டர் |
| சுத்தமான எள்ளெண்ணெ | 2 | ” |
| பொன்னாங்கண்ணிச்சார் | 2 | ” |
| வெங்காயச்சார் | 2 | ” |
| நெல்லிக்காய்சார் | 2 | ” |

மேற்குறித்த ஐந்தினையும் ஒன்றாகச் சேர்த்துக்கொண்டு, மற்றும்,

| | | |
|---|---|---|
| பிஞ்சு கடுக்காய் | 35 | கிராம் |
| அதிமதுரம் | 18 | ” |
| ஆவின் பால் | 9 | ” |

இவைகளை பாலிலரைத்து, வடிகட்டி, மேற்கண்ட கலப் புடன் ஒன்று சேரக்கூட்டி, அடுப்பேற்றி, கமலாக்கினியில் எரிக்கவும் தைலம் சரியான பதத்தில் வந்ததும், கீழிறக்கி, ஆறவிடுத்து, புட்டியிலடைத்து வைத்துக்கொள்ளவும். இது சகல நேத்திர ரோகங்களையும் போக்கும் திவ்ய அவுஷதமாதலால் பிணியாளர் உபயோகிப்பது நல்லது

## 13. காதில் சீழ் வடிதலுக்கு தைலம்

| | |
|---|---|
| குப்பைமேனி வேர் | வேளை வேர் |
| உத்தாமணி வேர் | ஆதண்ட வேர் |
| கஸ்தூரி மஞ்சள் | சாம்பிராணி |

மேற்கண்டவைகளில் வகைக்கு 350 கிராமாகக்கொண்டு நன்ருய் இடித்து, சுமார் 3 லிட்டர் நல்லெண்ணெயிலிட்டுக் காய்ச்சி, நல் பதமாகப் பார்த்து இறிறக்கிக் கொள்ளவும். இந்தத் தைலம் தேய்த்து, வெந்நீரில் அதிகாலையில் வேளா வேளைகளில் ஸ்நானம் செய்து வந்தால் காதில் சீழ் வடிதல் குணமாகுமெனத் தெரிகிறது. ஸ்நானம் செய்த அன்று கடுகு, நல்லெண்ணெய், தாளிப்பு, கூடாது.

## 14. கேச சம்ரக்ஷணம்

என்ஜாண் உடம்பிற்கு சிரசே பிரதானமெனவும், அச்சிரசிற்கு கூந்தலே அணிகலன் எனவும் பல்லோர் புகலுகின்றனர். மற்றும், அக் கூந்தலை ஒழுங்காக வாரி விட்டிருப்பதை காணும் காலத்து பின்னும் மகிழ்ச்சி ஏற்படுகின்றது. ஆகவே, கூந்தலை எங்ஙனம், அழகுபட ஒழுங்காக வைத்துக்கொள்ளுதலென்பதை ஈண்டு விவரிப்போம்.

முதலாவதாக:— அழகிற்கு அணிகலமாகிய கூந்தலை பேன், பொடுகு நீக்கி, சுத்தமென வைத்துக்கொள்ளுதல் வேண்டும். இதில் அநேகர் தவறுவதுண்டு காரணம் ரோம துவாரத்தின்கண் படிந்திருக்கும் அழுக்குப் படலத்தை அன்னார் கவனிப்பதில்லை. சிலர் நினைக்கின்றதுபோல் தண்ணீரில் இறங்கி குளித்துவிட்டால்மட்டும் அவர்கள் கேசம் சுத்தமாகிவிடாது ஆனல், அதனை சீயக்காய் அல்லேல் அறப்பால் நன்ருய் தேய்த்து துப்புறக் கழுவினுல் ஒருவாறு சுத்தமாகும் "கொண்டையில் இருக்குமாம் தாழம்பூ உள்ளிருக்குமாம் ஈறும் பேனும்" என்றதோர் பழமை சொல்லின்படி

நறுமணம் கமழும் வன்ஜாதி மலர் செண்டுகளால் அழகிடப் படும் கேசமானது. உள்ளும் புறமும் ஒன்றுபோலிருத்தல் நேர்மையன்றே? வெளிக்கு அழகு ததும்பும் நிலையில் கோதிவிடப்பட்ட கூந்தல் குழாத்துள் பேனும், பொடுகும் குடிகொண்டிருப்பதெனின், வெள்ளையடிக்கப் பட்டதோர் அழகு வீட்டிற்குள் தூசியும், குப்பையும் சேமித்துவைத் திருப்பதற்கொத்த தன்றேயாகிவிடும். மற்றும், ஈரும், பேனும் வசிக்குமிடத்தில் எக்காலத்தும் சொறியேற்பட்டு, யாவர் முன்னிலையிலும் சொரியும் நிலைமை யேற்படுவதன்னி யில், அழகாக வாரி முடிக்கப்பட்ட கூந்தல் முடிப்புதனை பிய்க்கவும் வேண்டியிருக்கும். அதிகப்படியான பேன் குடும்ப சஞ்சரிப்பின் காரணத்தால் ஆங்காங்கு சிரங்கும் ஏற்பட்டு, அதனை அவிழ்தத்தால் குணப்படுத்துவான் வேண்டி, சிகையை வெட்டவும் நேரிடும் மேலும், சுத்த மான கூந்தலில் அழுக்கு அதிகமாக சேராதிருப்பதுடன் தலையணைகள் கெடாது, பல்லோருடன் நெருங்கிப் பழகவும் கூடும். பார்வைக்கும் ரமணிகரமாயிருக்கும். ஆதலின் கூந்தலை எக்காலத்தும் சுத்தமாகவும், ஒழுங்குடனும் வைத் திருக்க வேண்டுமெனத் தெரிறது

இரண்டாவதாக :—கூந்தல் வளர்ச்சிக்கு ஒன்றியமையாத தைலம் ஒன்றை நேர்மையுடன் தயாரித்து, அதனை நாள் தவராது, கூந்தல் முடிப்பு காலங்களாகிய காலை மாலை நேரங்களில் உசிதமாய் உபயோகித்தல் வேண்டும். சிலர் விசேஷித்த தைலங்களை தலையுச்சியில் மட்டும் சிறிது தேய்த்துவிட்டு வாளாவிருந்துவிடுவர். இது போதாது இவ்வாறு செய்வ தால், தைலம் படாத எஞ்சிய மயிர்கால்கள் வரண்டுபோய் பலன் கொடாது நிற்கும். ஆகவே தைலத்தை எல்லா பாகங்களிலும், முக்கியமாக மயிர் கால்களனைத்திலும் நன்றாய் படும்வண்ணம் தேய்த்தல் வேண்டும் அதன்னியில் பின்னும் தைலத்தை உள்ளங்கையிற்கொண்டு கூந்தல் நுனி யாவையும் ஒன்றுசேர்த்து, அவை யாவற்றிற்கும் நன்றெனப் படும்படி தேய்த்துவிடுதல் அவசியம் இவ்வாறு செய்தலால்

கூந்தலானது மேலும்கீழும் குளிர்ச்சி ததும்ப மேற்கொண்டு வளர இடமுண்டாகிறது.

மூன்றாவதாக :— எங்ஙனம் வெட்டிவிடப்பட்ட மரம், செடி, கொடிகள் வெட்டுண்ட இடத்தின் நாலா பக்கங்களிலும், தளிர்மிகு கிளைகள் கொண்டு எழும்பி, அடர்ந்து வளர்கின்றனவோ அங்ஙனமே கேச வளர்ச்சியில் பிரியம்கொள் அன்பர்கள் அமாவாசைக்கு நான்காம் நாள், அதாவது முதலாம் சந்திர பிறை தெரிந்த மறுநாள் சூரியோதயத்திற்குப் பின் தமது கூந்தலின் நுனியதனை ஒன்றுகூட்டி மெல்லியதோர் நூலிழை வரை வெட்டிவிடுவார்களானால், கூந்தல் வளர்ச்சியி னுண்மையை தெற்றெனக் காணலாகும். மற்றும், கிராப் அன்றேல் சவரம் செய்துகொள்ளும் ஆடவர்களின் உயரிய கேச வளர்ச்சியே இதற்குப் போதிய சான்றாகும்.

நான்காவதாக :— எக்காலத்தும், யாது காரணம் கொண்டும் கூந்தல் முடிப்புதனை இறுக்கி முடித்தலாகாது. அவ்வாறு இன்றி அளவுக்கு மீறி கூந்தல் இழுக்கப்படுமாயின் ரோம துவாரத்தின்கண் பலங்குன்றி, விருத்திக்கு வழியில்லாது நின்றுவிடவோ அன்றேல் உதிரவோ ஏதுவாகும் இச்செய்கையால்தான் ரோமங்கள் இளவயதிலேயே காலகாரணமின்றி உதிர்ந்து, அழகை பங்கப்படுத்தும் நிலையில் சொட்டையேற்பட இடமுண்டாகிறது. ஆழ்ந்து நோக்கின் பல்வேறு குடும்பங்களில் இச்செய்கையாலேற்பட்ட விபரீதத்தைக் கண்கூடாகக் காணலாம்.

ஐந்தாவதாக :— தலையை எக்காலத்தும் சிறிது எண்ணெய்ப் பசை ததும்ப செழிசெழிப்புடன் வைத்திருக்கவேண்டும். ஆயினும் எண்ணெயை மட்டுக்கு மிஞ்சி உபயோகித்தல் இயற்கைக்கு முரண்பட்டதாகும். காரணம், கேச கண்களில் அதிகப்படியாகத் தேங்கி நிற்கும் எண்ணெயானது, திரேக உஷ்ணத்தாலோ அன்றேல் வெய்யிலின் உக்கிரத்தாலோ பொங்கி

யெழும்பி, கொதிப்புகொண்டு கேச வளர்ச்சியைத் தடுக்கும். மற்றும், வாயு வாகனாதிகளால் எழுப்பப்பெறும் தூசி, குப்பைகள் எண்ணெய்ப் பசையில் சிக்குண்டு, சிரசில் தங்கி, ஈறு, பேன் முதலியவைகட்கு இருப்பிடமாக்கும் இதன்னி யில், அதிகப்படியான எண்ணெய்யானது கழுத்து முதலிய வற்றின் வழியே கீழ் வழிந்து, அணிந்திருக்கும் ஆடை யாபரணாதிகளை நிர்தாக்ஷண்யமின்றிக் கெடுக்கும் ஆகவே, எண்ணெய்யை அளவுக்குமீறி உபயோகப்படுத்தாதிருப்பதே மேல்.

ஆறுவதாக :—ஸ்நானம் செய்யும் காலத்தில் தைலத்தைச் சிறிது அதிகப்படியாகத் தேய்த்து, குறைந்தது அரை மணி நேர மாவது நன்றாய் ஊறும்படி விடுதல்வேண்டும் எண்ணெய் தேய்த்த உடனேயே ஸ்நானம் செய்து அதனை நீக்கிவிடுவதி னால் அடையக்கூடிய பிரயோசனம் யாதுமில்லையென்றே கூறுதல் வேண்டும் எண்ணெய் சிரசின்கண் ஊறுவதினால் மூளையின் கொதிப்படங்கி, சிரம் குளிர்ந்து கேசவளர்ச்சியில் என்றுமில்லா விதத்தில் ஈடுபடச் செய்யும் மேலும், குளிக்குங்காலத்து உபயோகிக்கும் நீரானது அதிகச் சூடு இல்லாததாக விருத்தல் சிரேஷ்டம் சிலர் வெந்நீரை கொதிப்புடன், ஆவி யெழும்பும் நிலையில் உபயோகித்து வருகின்றனர். ஆனால் அதிகச் சூடுள்ள ஜலத்தின் வெப்ப மானது சிரசினிடத்து நின்று நிலவும் மயிர்கால்களை ஓரளவு தாக்கி, வளர்ச்சியின் செல்வாக்கை அடிப்படையாக பங்கப் படுத்தும் ஆயினும் சூடுள்ள நீரானது உடம்பின் வலிதனை ஒருவாறு போக்கி ஆரோக்கியத்தை மிளிரச் செய்யுமெனி னும், மயிர்கால்களுக்கு அளவுக்கு மீறின சூட்டால் பங்கம் உண்டென்பது வெளிப்படை

மற்றும், இயற்கையின் இன்ப நிலையங்களாகிய நீர்நிலை, அருவிகளில் ஆனந்த ஸ்நானம் செய்யும் அன்பர்களின் கூந்தல் வளர்ச்சியையும், அவைகளின் செழுசெழுப்பினையும் சர்வசதா வெந்நீரிலேயே ஸ்நானம் செய்து வருபவர்களின் கூந்தல் நிலைமையையும் சீர்தூக்கிப் பார்ப்போமாயின்,

குளிர் நீரில் ஸ்நானம் செய்வோரின் கூந்தலே அதிகமென்ப. ஆகவே, அதிகாலையில் வெதவெதப்புடன்கூடிய இயற்கை நீரே ஸ்நானத்திற்கு மெத்தவும் உகந்ததாகும். இத்தகைய அனுபவத்தை குடும்பங்கள் பலவற்றுள் செவ்வையுறக் காணலாம்.

இறுதியாக, மேற்கண்டவைகளை நன்னோக்கத்துடன் அனுசரிக்குங்கால் மத்தியான (இடைவேளை) போஜனத்திற்குப் பின், கூந்தலை சிரேஷ்ட தைலங்கொண்டு வாரி முடித்துக்கொள்ளின், கூந்தல் தாராளமாய் வளருமென கூறலாகும். மற்றும், நறுமணமிகு கூந்தல் தைலங்களை ஆசிக்காதவர்களும், தைலங்களை திறனுடன் செய்ய அசக்தர்களும் தேங்காய் எண்ணெய் அல்லது கடையில் விற்கும் (white oil) வெள்ளை எண்ணெயில் ஆலம் விழுதின் இளம் நுனிகளையும், வெந்தயத்தையும் கலந்தூற வைத்து உபயோகிப்பார்களானால் கேசம் விருத்தியடையுமெனத் தெரிகிறது. ஆகவே, "முயற்சியுடையார் இகழ்ச்சியடையார்" எனும் மொழிபோல் முயற்சிசெய்து பலனடைவதே மேன்மை.

## 15. பேன்களை நீக்கச் சுலபமான வழி

தலையில் பேன்கள் அதிகமாகிவிட்டால் அவைகளைச் சீப்பு கொண்டு சீவி, முற்றும் முடிய நீக்குதல் அரிது. மற்றும், பேன்களின் அரிப்பு மிகுதியினால் தலையில் சிற்சிலவிடங்களில் புண்களும் ஏற்பட்டு, அதின் காரணத்தினால் கூந்தலையே வெட்ட நேரிடினும் நேரிடலாம். ஆகவே பேன்களைப் பெருகவிடாது ஒழிப்பதே சிறந்த மார்க்கமாகும். அத்துறையின் சுலபமானதோர் முறையினை ஈண்டு கூறுவாம்.

10 அல்லது 12 சொட்டு கெரோசினாயில் (மண்ணெண்ணெய்) எண்ணெயை தேவையான சிறிது தேங்காய் எண்ணெயில் கலந்து கூந்தலின் எல்லா பாகங்களிலும் நன்றாய் படும்படி தேய்த்து விடவும். பின் சிறிதும் தாமதிக்காது மெல்லியதோர் நல்ல சீப்பு கொண்டு கூந்தலை இலேசாகச் சீவினால், பேன்கள் யாவும் மண்ணெண்ணெயின் துர்கந்தத்தினால் வெளிப்பட்டு, சீப்பின்கண்

சிக்குண்டு வெளி வந்துவிடும். பின்பு சுகந்த வெந்நீரில் சீயக்காய் தேய்த்து ஸ்நானம் செய்துக்கொள்ளவும்.

[குறிப்பு :—என்னெய் தடவியபின் கூந்தலை சீவும் காலத்து, சீவிக்கொள்பவரின் கூந்தலுக்கடியில் ஓர் வெண்துணி விரித்து வைப்பது நலம் ஏனெனில் உதிரும் பேன்களை துணியின்மூலம் நன்கறிந்துக்கொள்ளலாம்.]

## 16. தலையின் சுண்டைப் போக்கச் சுலப வழி

தலையில் சுண்டு அதிகமாயிருந்தால் அதனை காலாக்கிரமத்தில் போக்கிவிடுவது நேர்மையாகும். ஆகவே அதனைச் சுலபமாய் போக்கும் வழியினை கீழ் குறிப்பிட்டுள்ளோம் காண்க.

எலுமிச்சங்காயளவு சுண்ணும்பை ஒரு பைண்ட் சுத்த ஜலத்தில் ஓரிரவு முழுமையும் ஊறவைத்திருந்து மறுநாட் காலையில் மேல்நிற்கும் தெளி நீரை வடித்தெடுத்துக்கொண்டு கால் பைண்ட் வினிகரை அத்துடன் கூட்டி, மேற்படி கலப்பினுல் கூந்தலை முற்று முடிய (மயிர்கால்களுக்குப் படும்வரை) கழுவிக் கொள்ளவும் இதனுல் அபாயமில்லாதிருப்பதுடன் சுண்டுகளும் ஒழிந்துப்பாகுமெனத் தெரிகின்றது.

## 17. கற்ருழை நாற்றம் நீங்க

| | | |
|---|---|---|
| கஸ்தூரி மஞ்சள் | 140 | கிராம் |
| வாய்விளக்கம் | 70 | ,, |
| சடாமாஞ்சி | 70 | ,, |
| கசகசா | 70 | ,, |
| கார்போக அரிசி | 70 | ,, |
| பச்சிலை | 70 | ,, |
| சந்தனம் | 105 | ,, |
| கிச்சிலிக் கிழங்கு | 105 | ,, |
| கோரைக் கிழங்கு | 105 | ,, |

மேற்கண்டவைகளை வகை எடை தவராது எடுத்துக்கொண்டு இடித்து சூரணம் செய்து, ஈரமில்லாததோர் டப்பியில் அடைத்து வைத்துக்கொள்ளவும். இதனை ஸ்நான காலத்தில் தேகமெங்கும் தண்ணீர் சேர்க்கையுடன் தடவி சுகஸ்நானம் செய்தால் சுகந்த மளிக்கும் அருவருப்பை அறவே நீக்கி, மேனி வனப்பை மிளிரச் செய்யும்.

# பன்னீர் வகைகள்

## அத்தியாயம் 5

### 1. சுகந்த பன்னீர் செய்முறை

| | |
|---|---|
| சந்தனக் கட்டை | 1400 கிராம் |
| சம்பங்கி மொக்கு | 560 " |
| லவங்கப்பட்டை | 280 " |
| கிச்சிலிக் கிழங்கு | 280 " |
| ஒஸ்தி சாம்பிராணி | 280 " |

மேற்கூறப்பட்ட ஐந்தினையும் உரலிலிட்டு நன்ருய் இடித்து சுமார் 20 லிட்டர் ஜலத்தில் ஒருநாள் பூராவும் ஊறவைக்கவும். பின் அதனை வாலையிலேற்றி கமலாக்கினியாக எரித்து சுகந்த திரவமாக்கிக் கொள்ளவும். நீர் எவ்வளவுக்கெவ்வளவு சுண்டுகிறதோ அத்தன்மையில் பன்னீரும் சுகமாயிருக்குமெனக் கண்டு கொள்ளவும்.

### 2. பன்னீர் (சுலப முறை)

| | |
|---|---|
| சுகந்த ரோஜா பூவிதழ் | 1400 கிராம் |
| சுத்த ஜலம் | 2800 " |

தூசி, குப்பை முதலியன நீக்கி சுத்தம் செய்யப்பட்ட நறுமண மிகும் வன்ஜாதி ரோஜா பூவிதழ்களை குறுகிய கழுத்து உடையதோர் மண் பாத்திரத்தில் போட்டு வைக்கவும். பின் சுத்த ஜலத்தை பிரிதொரு மண் பாத்திரத்தில் [illegible] கொதி

நீரை ஊற்றி காற்று வெளி செல்லாதபடி பாத்திரத்தை சர்வ ஜாக்கிரதையுடன் மூடிவிடவும் சுமார் ஒருமணி நேரம் கழித்து நீர் வடிகட்டும் கருவியினுல் (ஸ்பில்டரினுல்) வடிகட்டவும். இது சகல விதத்திற்கும் உபயோகப்படும் சுகந்த பரிமளிக்கும் பன்னீராகுமென்பதில் தடையில்லே.

## 3. பன்னீர் (வேறு முறை)

| | | |
|---|---|---|
| சாம்பிராணி | 105 | கிராம் |
| இச்சிலிக் கிழங்கு | 105 | ” |
| சம்பங்கி மொக்கு | 105 | ” |
| ஜாதி கோஷ்டம் | 105 | ” |
| குலாப்பூ | 875 | ” |
| கிளியூரல்பட்டை | 350 | ” |
| லவங்கப்பட்டை | 105 | ” |
| சந்தனத் தூள் | 700 | ” |

மேற்கண்டவைகளே தனித்தனியே ஒன்றிரண்டாக இடித்து, கீழ் விஸ்தரிக்கப்பட்டிருக்கும் "வாலே" யென்னும் பாத்திரத்தில் சுமார் 50 லிட்டர் ஜலத்தில் ஒரு வாரம்வரை ஊறவைக்கவும். பின் அவைகளே அடுப்பேற்றி, நிதானமாக எரித்து, ஆவித் தண்ணீரை புட்டிகளில் சேகரித்து வைத்துக்கொள்ளவும்.

[குறிப்பு:—வாலேயின் மேற்புறத்தில் ஊற்றப்படும் ஜலமானது அப்போதைக்கப்போது மாற்றப்பட்டு, குளிர்ந்த புதிய நீர் ஊற்றல் வேண்டும். அவ்வாறு ஊற்றப்படின், ஆவித் தண்ணீரானது அதிசீக்கிரத்தில் குளிர்ந்து, திரவமாக மாற ஏதுவுண்டாகும் மற்றும் மேற்கண்ட பன்னீரானது விற்பனைக்கு ஏற்றதாயிருக்குமேயன்றி குடும்ப உபயோகத்திற்கு உகந்ததல்ல. ஆகவே, குடும்ப உபயோகத்திற்கான பன்னீரில் ஒவ்வொரு 168 கிராமிற்கும் ஒரு துளி "ரோஸ் எசன்ஸ்" என்னும் ரோஜா வாசனே சென்டைக் கலக்குதல் நல்லது. பன்னீரும் சுகமாயிருக்கும்.]

# திராவகம் இறக்கும் "வாலை" வகை

## அத்தியாயம் 6

### 1. திராவகம் இறக்கும் வாலை செய்யும்விதம்

27 சென்டி மீட்டர் குறுக்களவு (dia-meter) கொண்டதும், சுமார் 36 செ. மீ. உயரமுள்ளதுமான வட்டவடிவ பாத்திர மொன்றை தண்ணீர் ஒழுக்கில்லாது தயாரித்துக்கொள்ளவும். பின், ஷை பாத்திரத்தின் மூடியானது, 27 செ, மீ. உயரமும், மூன்றிற்கு ஒன்று (3:1) சாய்வான இரண்டு தட்டுக்கள் கொண்டதாகவுமிருக்கவேண்டும். மற்றும் அதின் கீழ் தட்டில், 27 செ. மீ அகலமுள்ளதோர் துவாரமும், தட்டின் சாய்ந்த கோடியில் ஓர் சிறு பைப்பும், இருத்தலவசியம்.

இவ்வண்ணம் சித்தமாக்கப்பட்ட மூடியினை, பாத்திரத்தின் கண் திராவகம் இறக்குங்கால் சரக்குகள் யாவற்றையும், உள்ளிட்டு மூடி உளுத்தமாவு பூசப்பட்ட துணியினால், பொருத்தப்பட்ட இடத்தின் சீலைமண் செய்யவும் பின்னர், ஷை பாத்திரத்தை மேல்தட்டில், குளிர்ந்த நீருடன் அடுப்பேற்றி, எரிக்கவும் எரிக்குங்கால் மேலெழும்பும் ஆவியானது, முதல் தட்டின் துவாரத்தின் வழியே வெளிப்பட்டு, இரண்டாம் தட்டின் குளிர்ச்சியால் குளிர்ந்து, திரவமாகி, கீழ் வழிந்து முதல் தட்டின் சாய்வான ஓரத்தில் ஒருங்கு திரண்டு, திறந்து விடப்பட்டிருக்கும், பைப்பின் வழியே, புட்டியில் வந்துசேரும். யாவும் சேர்ந்ததும் கார்க்கிட்டு வைத்துக்கொள்ளவும். இவ் விதமே எவ்வித திராவகத்தையும் தயாரித்துக்கொள்ளலாம்.

### 2. திராவகம் இறக்கும் "வாலை" நாட்டுமுறை

வாய்குறுகலாயுள்ளதோர் மண் பாத்திரத்தின் அடிபாகத்தை வட்டவடிவமதாக உடைத்தெரிந்து விட்டு, அதே அளவுள்ளதோர் வேறொரு பாத்திரத்தின் வாயகத்தே, (வாய்ப்புறம் மேலிருக்கும் வண்ணம்) பொருந்தி, அவ்விடத்தில் ஆவி வெளி செல்லாதவாறு,

சிலேமண் செய்யவும் பின், பிரிதொரு மண் பாத்திரத்தின் அடி பாகத்தில், சிறியதோர் துவாரமொன்று செய்து அதனை, மேற் குறித்த பாத்திரத்தில், திராவக சரக்குகளனைத்தும் போட்டதின் பின் மூடி, அடுப்பேற்றவும். அடுப்பேற்றி எரிக்கையில், மேல் பாத்திரத்தின் துவாரத்திற்கு பக்கத்தில் மூன்று சிறு கற்களை நிறுவி, அதன்மேல் ஓர் சிறு (செம்பு) பாத்திரத்தை வைத்து, மேல் பாத்திரத்தின் வாயகத்தை நடுவில் பள்ளமாயிருக்கும் சருவத்தால்மூடி குளிர் நீர்விட்டு வைக்கவும்.

முதல் பாத்திரத்தினின்றும் எழும்பப்பெறும் ஆவியானது, மேல் பாத்திரத்தின் துவாரத்தின் வழியே வெளிப்பட்டு, சருவத்தைதாக்கி, அதன் குளிர்ச்சியால் தன்னென குளிர்ந்து திரவமாகி, நடுவில், கற்களின் பேரில் நின்று நிலவும் சிறு பாத்திரத்தில் விழ்ந்து நிறம்பும். கடைசியாக, ஆவியாவும் அடங்கிய பின், நடுவிலுள்ள பாத்திரத்திலிருக்கும் திராவகத்தை சேமித்து வைத்துக்கொள்ளவும். இது நாட்டு முறையானதால் சிறிது கவனத்துடன் செய்தலவசியம்.

## திராவகம் இறக்கும் "வாலே" மற்றொரு விதம்

சுமார் 45 செ. மி. உயரமானதும், ஏறக்குறைய 27 செ. மீ. சுற்றுக்களவுகொண்ட வட்ட வடிவமான பாத்திரமொன்றை காற்று நுழையா மூடியுடன், தயாரிக்கவும், பின் அப்பாத்திரத்தின் சுமார் 30 செ மீ. உயரத்தில் ஓர் துவாரம் செய்து முக்கால் அங்குல கனமுள்ளதோர் தகர குழாயை அதில் காற்று வெளியேறு வண்ணம் பொருத்தவும். இவ்விதம் பொருத்தப் பட்ட குழாயின் மறு நுனியை அரையடி பரிமான முள்ளதோர் கண்ணாடி பாத்திரத்தில் ரப்பர் குழலின் உதவியால் சரிவர பொருத்திவிடவும் இவையனைத்தும் சித்தம் செய்ததும், பெரிய பாத்திரத்தை திரவ சரக்குகளுடன் ஸ்டவ் என்னும் அடுப்பின் ஸ்டான்டுகளின் மீது வைத்து மூடியிட்டு பதமாய் காய்ச்சவும். அவ்வாறு காய்ச்சுங்காலத்து, வெளிப்படும் ஆவியானது 37 செ மீ உயரத்தில் பொருத்தப்பட்ட குழலின் வழியே கீழ் இறங்கி கண்ணாடி பாத்திரத்தில் வந்தடையும் அக்காலத்தில் ஷீ

கண்ணாடி பாத்திரத்தை குளிர்ச்சியான ஜல முள்ளதோர் பாத்திரத்தில் அமிழ்ந்திருக்கும்படி வைப்பதினால், வந்தடைந்த ஆவியானது தண்ணீரின் குளிர்ச்சிபட்டு, குளிர்ந்து திரவமாக மாறும். இவ்வண்ணமே, இக்கருவியினால் எத்தன்மையான சரக்குகளின் திரவத்தையும் தயாரிக்கலாம். உதாரணமாக, பன்னீர், (செண்ட் அத்தர்) சர்பத்துக்கு வேண்டிய எசன்ஸ்கள், தைலங்கள், ஓமவாட்டர், ஓமதிராவகம், முதலியனவற்றையும் சுலபமாகவும், அதிக செலவின்றியும் உயர்வான முறையில் தயாரிக்கலாம்.

## 4. பன்னீர் தயாரிக்கும் பாத்திரம் செய் முறை

சுமார் 72 செ மீ. உயரமுள்ளதானதோர் ஈயம் பூசிய செம்பு அல்லது இரும்பு பாய்லரை 18 செ மீ குறுக்களவு (dia-meter) கொண்ட கழுத்துடையதாகச் செய்துக்கொள்ளவும். பின், அதே, குறுக்களவு கொண்டதொரு தவலை, அல்லது தேக்சாவை வாய்புறம் பொருத்திவிடவும். அவ்வாறு பொருத்தப்பட்ட தேக்சாவின் அடிபாகத்தில் ஓர் சிறு துவாரம் செய்து, இரண்டடி அகலமும் 216 செ மீ. நீளமு முள்ளதோர் குறுக்கோன தகரக் குழாயை சுமார் 9 செ மீ குழாய் உள்ளிருக்குமாறு பொருத்திவிடவும். பின், தகரக் குழாவின் நீண்ட பாகத்தை கழுத்து குறுகலாயுள்ளதோர் பாத்திரத்தில் வைத்து, அப்பாத்திரத்தை குளிர்ந்த நீர் நிரம்பியுள்ளதோர் வேறொரு பாத்திரத்தில் வைக்கவும். இவைகள் யாவும் சித்தமாகியதும், நான்கு ஆயிரம் ரோஜா புட்பங்களை சுமார் 16 லிட்டர் ஜலத்துடன் பாத்திரத்திலிட்டு, நிதானமாய்க் காய்ச்சவும். காய்ச்சுங் காலத்து உள்ளிட்ட நீரானது ஆவியாகி, குழலின் வழியே வெளிப்போந்து நீருக்குள்ளிருக்கும் பாத்திரத்தை யடைந்து குளிர்ந்த திரவமாக மாறும். அந்த திரவத்தை ஓர் வெண் குப்பியில் சேகரம் செய்துக்கொள்ளவும். பின்பு, அதனை சில தினங்கள்வரை சூரியபுடம் வைத்திருந்து உபயோகிக்கவும் சுகந்தப் பரிமளிக்கும் 1000 புட்பங்களுக்கு $1\frac{1}{2}$ லிட்டர் பன்னீராகுமென்று கணக்கிடப்பட்டிருக்கிறது. கவனிக்கவும்.

# கூந்தல் எண்ணெய் வகை

## அத்தியாயம் 7

### 1. கதம்ப மலர் கூந்தல் எண்ணெய்

இயற்கை இன்பத்தின் இருப்பிடமாகிய சுந்திர நந்தவனங்களில், கதிரோனின் நிகரற்ற ஜோதிக்கு இலக்காகி, புஷ்பித்து, மகிழ் மணம் கமழும், மல்லிகை, முல்லை, இருவாட்சி, சண்பகம், மற்றும் மணமிகும், தாழை ரோஜா முதலிய சுகந்த புஷ்பங்களை சேகரித்து, நிழலில் உலர்த்தவும் நன்ருய் உலர்ந்ததெனக் கண்டதும், எல்லாவற்றையும் ஒருங்கு சேர்த்து, ஓர் மரப் பெட்டியில் சில காலம் அந்தப்படியே வைத்திருந்து, பின், அத்துடன், வெட்டிவேர், விலாமிச்சிவேர், அகிற் கட்டை சந்தனம் வகைக்கு 35 கிராமாகக்கொண்டு ஒருதுண்டு அல்கஹெனட்ருட்டுடன் சுத்தமான நல்லெண்ணெய், அல்லது தேங்காய் எண்ணெயில், இரண்டு நாட்கள் ஊறவைத்திருந்து, பின் பாத்திரத்தின் வாயகத்தே ஓர் வெண்துணி, பொதிந்துகட்டி, 7 நாட்கள் வரை சூரியபுடம் வைக்கவும், அவ்வேழு நாட்களுக்கப்புறம், அதனை வடிகட்டி, ஓர் புட்டியில் அடைத்துக்கொண்டு, கூந்தலுக்கு உபயோகித்து வரவும்.

### 2. மலர் கேசரி கூந்தல் எண்ணெய்

மேற் கூறப்பட்ட புஷ்பங்களை வகையுடன் சேகரித்து நிழலில் உலர்த்தி ஒரு மாத காலத்திற்குப் பின், அவைகளுடன் கார்போக அரிசி, அன்னுசிப்பூ, கதிர்பச்சை, வெட்டிவேர், விலாமிச்சம்வேர், சந்தனம், இவைகளை தூளாக்கி, ஒரு டப்பில் வைத்துக்கொண்டு, தேவையானபோது எண்ணெயில் கலந்து ஊறவைத்து உபயோகிக்கவும். குணமுண்டு.

[குறிப்பு:—எண்ணெயை வடிகட்டினதின் பின், எஞ்சி நின்றிருக்கும் பூச் சக்கையை எறிந்துவிடாமல் ஸ்நான காலத்தில் கூந்தலுக்கு தேய்த்து தலைமுழுகி வரலாம். தேக ஆரோக்கியத்

துடன் பரிமளமும் கிட்டும் இத்தகைய கூந்தல் எண்ணெயை ஒவ்வொரு டும்பத்ினரும் சுலபமாகச் செய்யலாம். தாங்கள், அனுதினம் வாங்கி முடிக்கும் நல் புஷ்பங்களை, உபயோகித்ததின் பின் எறிந்துவிடாமல் பத்திரப்படுத்தி வைத்திருந்தால் கூந்தல் எண்ணெய்க்காக அவ்வித புஷ்பங்களை அநேகமாக தேட வேண்டுவதில்லை ]

## 3. ரோஸ் கூந்தல் எண்ணெய்

| | | |
|---|---|---|
| நல்லெண்ணெய் | 4 | லிட்டர் |
| ரோஸ் செண்ட் | 84 | கிராம் |
| ரெட் ஆயில் கலர் | 4 | ,, |
| அல்லது | | |
| அல்கனெட் ரூட் | 28 | ,, |

மேற்குறித்த மூன்றையும் ஓர் புட்டியில் சேர்த்து குலுக்கி விட்டு உபயோகிக்கவும்.

[குறிப்பு :—நல்லெண்ணைக்கு பதிலாக தேங்கா எண்ணெயை யும் சேர்க்கலாம். ஆனுல் தேங்காய் எண்ணெயில் தண்ணீர் கலப்பில்லாததாகப் பார்த்தலவசியம்.]

## 4. மல்லிகைப்பூ எண்ணெய் (சுலப முறை)

| | | |
|---|---|---|
| சுத்தமான தேங்காய் எண்ணெய் | | |
| அல்லது நல்லெண்ணெய | 4 | லிட்டர் |
| ஜாஸ்மின் செண்ட் | 84 | கிராம் |
| கோல்டன் கலர் | 4 | ,, |

முன் குறிப்பிட்டபடி தயாரித்து, பின் உபயோகிக்கவும்.

## 5. தாழப்பூ எண்ணெய்

| | | |
|---|---|---|
| தாழம்பூ எசன்ஸ் | 84 | கிராம் |
| நல்லெண்ணெய் | 4 | லிட்டர் |
| கோல்டன் கலர் | 2 | கிராம் |

நல்லெண்ணெயில் கோல்டன் கலரைக் கலந்து, பின், சனையைக்கூட்டி உபயோகிக்கவும்.

### 6. முக வசீகரி பவுடர்

| | | |
|---|---|---|
| பச்சைப் பயிறு | ½ | லிட்டர் |
| கடலை மாவு | ¼ | ,, |
| கஸ்தூரி மஞ்சள் | 70 | கிராம் |
| பூலாங் கிழங்கு | 35 | ,, |

கஸ்தூரி மஞ்சள், பூலாங் கிழங்கு இவை இரண்டையும், -மாராக இடித்துக்கொண்டு, பின், பச்சைப் பயிரைக் கலந்து, -ன்ருய் வேண்டியமட்டு மிடித்து, மெல்லிய பவுடராக ஜலித்து -டுத்துக்கொள்ளவும். மேற்கண்ட பவுட்ருடன், கடலை, மாவைக் கலந்து, டப்பியிலடைத்து வைத்துக்கொண்டு காலை மாலை மற்றும், முகம் கழுவும் நேரங்களிலும், ஸ்நான காலத்திலும் இதனை உபயோகிப்பதினுல், முகவசிகரம் உண்டாகுமெனத் தெரிகிறது. பொதுவாக, இது, பெண்களுக்கும், குழந்தைகட்கும் முக தேஜசைக்கொடுத்து, மேனி அழகை பாதுகாக்கும் இயல்புடையது.

# முக வசீகர வகை

## அத்தியாயம் 8

### 1. வசீகர மெழுகு

| | |
|---|---|
| கார்போக அரிசி | பூலாங் கிழங்கு |
| நீரடிமுத்து | |

மேற்கண்டவைகளில் நீரடிமுத்து நீங்களாக, ஏனையவற்றை நன்ருய் இடித்து தூளாக்கிக்கொண்டு, பின், முத்தை தோல் நீக்கிச் சேர்த்து, நன்ருய் அரைத்து மெழுகு போலாக்கிக் கொள்ளவும். இத்தகைய மெழுகை ஸ்நானத்திற்கு ஒரு மணி

சாவகாசத்திற்கு பின், எல்லாவிடங்களிலும் நன்ருய்த் தேய்த்து, ஒரு மணி நேரம் ஊறினதின் பின் கையினுல் அழுக்கரத் தேய்த்து வெண்ணீரில் ஸ்நானம் செய்யவும். இதனுல், தேக மெங்கும் பரிமளம் வீசுவதுடன், சொறி, சிரங்கு முதலியன நெருங்கா.

## 2. பரிமள மெழுகு (வேறு விதம்)

| | |
|---|---|
| கஸ்தூரி மஞ்சள் | இச்சிலிக் கிழங்கு |
| கசகசா | சடாமாஞ்சி |
| சந்தனத் தூள் | கோரைக் கிழங்கு |

கார்போக அரிசி

இவை யாவற்றிலும் வகைக்கு 35 கிராமெடுத்து தண்ணீர் சேர்க்கையுடன் மெழுகு போலரைத்து, சிறிது நல்லெண்ணெய் விட்டுக் குழைத்து, தேகமெங்கும் தடவி உலரவிடவும். சிறிது உலர்ந்ததும், கையினுல், நன்ருய்த் தேய்த்து, அழுக்கர ஸ்நானம் செய்தால் கற்ருழை நாற்றம் முதலியன நீங்கி, தேகம் புளகாங்கித மடைந்து என்றுமில்லா வனப்புடன் விளங்கு மென்பதில் என்ன தடை?

## 3. நலங்குப் பொடி

| | | |
|---|---|---|
| மருவு | 70 | கிராம் |
| மரிக்கொழுந்து | 70 | ,, |
| ஆவாரம்பூ | 70 | ,, |
| இச்சிலிக் கிழங்கு | 70 | ,, |
| வெட்டி வேர் | 70 | ,, |
| விலாமிச்சம் வேர் | 140 | ,, |
| கஸ்தூரி மஞ்சள் | 175 | ,, |
| பச்சைப் பருப்பு | ½ | லிட்டர் |
| சந்தனம் | 70 | கிராம் |
| ஆரஞ்சித் தோல் | 35 | ,, |

| | | |
|---|---|---|
| தவனம் | 35 | கிராம் |
| கார்போக அரிசி | 105 | ” |
| உலர்ந்த மல்லிகை | 70 | ” |
| கசய்ந்த ரோஜாக | 70 | ” |

இவை யாவையும் தனித்தனியே இடித்து, தூளாக்கி வஸ்திர வஸ்திரகாயம் செய்து, ஈரமில்லாததோர் டப்பியில் சேர்த்து வைத்துக்கொண்டு, காலை, மாலை நேரங்களில் இதனைத் தேய்த்து, அழுக்கர முகம் கழுவி வந்தால், களைமிகுந்து தேஜஸ், உண்டாவது மன்றி, யௌவன பிராயத்தே, வேளர் வேளைகளில் உன்டாகும் மாசு, மரு, முதலியன நீக்கி வசிகரண தன்மை யுண்டாக்கும் திரேகத்திற்கு உபயோகிப்பின் சொறி, சிறங்கு அனுகாததுடன், புண், பொட்டுகளும் தொலைந்துபோம்.

[குறிப்பு:—கலியாண கால்லங்களிலோ அன்றேல், ஏனைய விசேஷத்த தினங்களிலோ, மாப்பிள்ளை, பெண்ணிற்கு நலங் கிடுங்கால், இதனை உபயோகிப்பின், சுகந்தத்தின் காரணமாக, வெறுப்பு தோன்ருது, இன்னும் சிறிது போழ்து அந்த லீலையில் ஈடுபட்டிருப்பரென்பது, மிகை, மிருதுதேகம் பூண்ட, இளஞ் சிறுவர்கட்கும், பெண்களுக்கும் உகந்ததேகர் ஸ்நான வரப்பிரசாதமாகையால், குடும்பத்துள் இதனை உபயோகித்தல் சிரேஷ்டமெனப்படுகிறது.]

## 4. நலங்குப் பொடி (வேறு வகை)

| | | |
|---|---|---|
| ஒஸ்தி சாம்பிராணி | 140 | கிராம் |
| குங்குமப்பூ | 75 | ” |
| வெட்டிவேர் | 105 | ” |
| விலாமிச்சம் வேர் | 105 | ” |
| கஸ்தூரி மஞ்சள் | 105 | ” |
| சந்தனம் | 70 | ” |
| ஜாதிக்காய் | 35 | ” |
| அன்னுசிப்பூ | 35 | ” |
| வாய்விளக்கம் | 70 | ” |

மேற்கண்டவைகளைத் தனித்தனியே. இடித்துத் தூளாக்கி, பின் ஒன்றுகூட்டி நல்டப்பியொன்றில் சேகரம் செய்து வைத்துக் கொள்ளவும். தேவையானபோது சிறிதெடுத்து சுகந்த பன்னீரில் நன்ருய் குழைத்து, தேகமெங்கும் தடவி ஸ்நானம் செய்யவும். சுகந்தம் பரிமளிப்பதுடன், திரேக சுகமும் கிட்டும்

## 5. சுகந்த பரிமள மாத்திரை

| | | |
|---|---|---|
| விலாமிச்சன் வேர் | 140 | கிராம் |
| கஸ்தூரி மஞ்சள் | 105 | ,, |
| பச்சை கற்பூரம் | 70 | ,, |
| பன்னீர் | 168 | ,, |
| சாம்பிராணி | 105 | ,, |
| நெய்யரிசிப்பால் | 70 | ,, |
| ஜாதிபத்திரி | 35 | ,, |
| சந்தனம் | 105 | ,, |

பன்னீர் நீங்கலாக ஏனையவற்றை ஒன்றுசேர்த்து இடித்து தூளாக்கிக்கொண்டு, பின் பன்னீர் சேர்த்து மைபோலரைத்து, சின்னஞ்சிறு உருண்டைகள் பிடித்து, கண்ணுடி அன்றேல் பீங்கான் தட்டுகளில் வைத்து, இளம் வெய்யலில் காயச்செய்து எடுத்துக்கொள்ளவும். தேவையானபோது அவைகளிலொன்றை தண்ணீரிட்டுக் குழைத்து முகத்திற்கு தேய்த்துக் கழுவவும், இவ்விதமே சின்னுட்கள் செய்துவந்தால், நாளாவட்டத்தில் முகத்தில் மாசு, மரு நீங்கி பரிமளத்துடன் வதன காந்தியும் உண்டாகும்.

## 6. ஸ்நோ

| | | |
|---|---|---|
| சுகந்த பன்னீர் | 420 | கிராம் |
| ஸ்டெரிக் ஆசிட் | 2265 | ,, |
| போரக்ஸ் பவுடர் B.P. | 420 | ,, |
| சுத்தமான தண்ணீர் | 34 | லிட்டர் |
| விட்ச்ஹஸெல் | 56 | கிராம் |

| | | |
|---|---|---|
| மல்லிகைப்பூ செண்ட் | 28 | கிராம் |
| லவண்டர் | 28 | ,, |
| ரோஸ் எசன்ஸ் | 28 | ,, |
| சுத்தமான ஸ்பிரிட் | 112 | ,, |

முதலில் ஸ்டெரிக் ஆசிட்டை 4 லிட்டர் சூடான ஜலத்தில் முற்றும் முடிய கரைத்துக்கொண்டு பின் அடுப்பேற்றி சுமாரான அனலில் வைக்கவும். இம்மாதிரியே வேறொரு பாத்திரத்தில் போரக்ஸ் பவுடரை 6 லிட்டர் சுத்த ஜலத்தில் கரைத்து, கொஞ் சங்கொஞ்சமாக இளகியவண்ணம் முன் தயாரித்த ஆசிட் சொலு ஷனில் சேர்க்கவும் அம்மாதிரி பாதி சொலுஷன் சேர்க்கப் பட்டதும் ஊற்றுவதை நிறுத்திவிட்டு, முன் கூட்டிய சேர்க்கை யானது பாகுபதம் வந்ததும், அடுப்பிலிருந்து (தணலிலிருந்து) கீழிறக்கி, மிச்சமிருக்கும் நீரையும் போரக்ஸ் சொலுஷனையும் ஒன்றுபட கலந்து ஆறவிடவும் ஒன்றிரண்டு நாட்களுக்கு பின் பன்னீர், விட்ச்ஹஷெல் முதலியவைகளைச் சேர்த்து கடைசியாக வாசனைகளை ஸ்பிரிட்டில் கலந்து உபயோகிக்கவும்.

## 7. ஸ்னோ வேறு வகை

| | | |
|---|---|---|
| பாதாம் பருப்பு | 336 | கிராம் |
| ரோஸ்மெரி ஆயில் | 14 | ,, |
| ரோஸ் வாட்டர் (பன்னீர்) | 14 | ,, |
| ஸ்பிரிட் ஆப் ஒயின் | 140 | ,, |

பாதாம் பருப்பை பன்னீர்விட்டு மைபோலரைத்துக் கொண்டு, அதன்பின் வாசனை சரக்குகளை ஒன்று சேர்த்துக் கூட்டி, இறுதியில், இரண்டு கோழி முட்டைகளின் வெண் கருவைக் கலந்து புட்டிதனில் சேகரம் செய்து வைக்கவும். தேவையானால். சிறிது அத்தரும் சேர்த்துக் கொள்ளவும். இதனை காலை, மாலை நேரங்களில் உபயோகப்படுத்துவதினால், முகம் குளிர்ந்து, பூரிப்புடன் கூடியதோர் வனப்புகொண்டு மிளிரும் அழகுடன், வசீகரத்தன்மை தோன்ற, இளமையின்

அழகு பொலிந்து விளங்க, நின்று நிலவும், இக்காலத்தில் ஆண், பெண், அடங்கலாக அனைவரும் இத்தகைய முகவசிகரியை உபயோகித்து வருகின்றனர். என்றாலும், மட்டுக்கு மிஞ்சி உபயோகப்படுத்தாதிருப்பதே மேல். "அளவிற்கு மீறின் அமுதமும் நஞ்சாகு" மென்பதுபோல், நவீன நாகரீகத்தின் காரணமாக நாள்ளொன்றிற்கு, பத்துப் பதினைந்து தடவை, நினைத்த நேரமெல்லாம் ஸ்னோவும் கையுமாக இருப்பதினால், முகத்தின் தேஜஸ்கெட்டு, வாலிப அழகு குன்றி, மலர்ச்சியின் றிருக்க நேரிடுகின்றது. ஆகவே, எதற்கும் ஓர் வரையிருத்தல் நேர்மையன்றோ.

## 8. வாஸ்லேன் போமெட்

| | | |
|---|---|---|
| மஞ்சள் வாஸ்லேன் | 454 | கிராம் |
| வாஸ்லேன் காம் பவுண்ட் வாசனை | 196 | " |

வாஸ்லேனை சிறிது வாட்டர் பாத்தில் சூடேற்றி, இளக வைத்து, வாசனையைக் கலந்து, தண்ணீர் பதத்திலிருக்கும் போதே பாட்டல்களில் அடைத்து, ஆறினதின்பின் கார்க்கிடவும்.

[குறிப்பு:—"வாட்டர் பாத்" என்பது, ஒரு பாத்திரத்தில் சிறிது தண்ணீரை காயவைத்துக்கொண்டு, அப்பாத்திரத்தில், இளக்க விருக்கும், வாஸ்லேன் பாத்திரத்தை சுடுநீரில், வைத்து, தண்ணீரின் காங்கையால் சூடேற்றி இளக்கவைத்தலென்பதாம். இவ்வாறு செய்வதால் வாஸ்லேன் முதலியவற்றிற்கு நெருப்பின் வாசனை இல்லாதிருப்பதுடன் தீயவுமிடமில்லை. ஆகவே இதனை, அனுஷ்டித்தல் சாலவும் நல்லதே ]

# அத்தர் வகை

## அத்தியாயம் 9

## 1. ரோஜாப் பூ அத்தர் (சுலப முறை)

வாய் விசாலமாயுள்ள தோர் நல் பாத்திரத்தில் அன்றலர்ந்த ரோஜா புஷ்பங்களை போட்டு, அதன் மேல் சுத்த ஜலத்தை

ஒரு அங்குல உயரம் வரையூற்றி, குளிர்கால இரவில் பனியில் வைக்கவும். மறுநாட் அதிகாலையில், புட்பங்களுக்கு மேல் நிற்கும் தண்ணீரின் மேற்புறத்தில் ஆங்காங்கு மிதக்கும் அத்தரை சிறிது பஞ்சின் உதவியால், மெதுவாய் கொஞ்சம் கொஞ்சமாக, தொட்டெடுத்து, சிறியதோர் சீசாவில் சேகரித்து வைக்கவும். பின், சேகரம் செய்த அத்தர் சீசாவை, சூரிய புடத்தில் நான்கைந்து நாள் வைத்திருந்து பின் உபயோகிக்கவும். சுகந்த மளிக்கும்.

## 2. ரோஜா அத்தர்

சுகந்த பன்னீரை வாய் விசாலமான தோர் உலோக தட்டொன்றில் கண் ஊற்றி, வெண்மையும் மெல்லியதுமான ஈரத் துணியால் மூடி வைக்கவும் இவ்வாறு செய்வதால் தூசி, குப்பை, முதலியன பன்னீரின் கண்விழ ஏதுவிராது பின், தட்டை வைக்கப்போதுமான தோர் இரண்டடி ஆழமுள்ள குழி யொன்று வெட்டி, அதனை, தண்ணீர் சேர்க்கையாலும் மணல் முதலிய வற்றாலும் ஈரமாக்கி, அதன் கண் பன்னீர் தட்டை முழுமையும் அந்தப்படியே இருக்குமாறு வைக்கவும், பெரும் பாலும் அத்தரானது குளிர்கால இரவுகளில் செய்யப்படுகின்ற மையால் அக்காலந்தான் அதற்குகந்ததாகும். ஆகவே, பனி வெளியிற் வைக்கப்பட்ட பன்னீர் தட்டின் மேல் பரப்பை, அதி காலையிற் நோக்கின், சுகந்தமிகும் அத்தரானது, பன்னீர் தட்டின் மேல் தளத்தில் ஆங்காங்கு மிதக்கும் அதனை மெல்லிய இறகுகளினால் தொட்டெடுத்து அதிஜாக்கிரதையுடன் புட்டியில் சேகரம் செய்துக்கொள்ளவும் இவ்வண்ணமே பன்னாள் சேகரித்த அத்தர் துளிகளை, இளம் வெயயலில் சூரியபுடம் வைத்தெடுக் கவும் அங்ஙனம் வைத்தெடுக்கப்பட்ட அத்தரானது அம்பர் நிறமடைந்ததும், புட்டியில் சேமித்து வைத்துக்கொள்ளவும். சின்னாட்களுக்கப்புறம் அத்தரானது வெளுத்த பச்சை நிறமாகக் காணப்படும். பிறகு, காலாகாலத்தில் நிறம் வேறுபட்டு மஞ்சள் நிறமுள்ளதாகும் ஒரு லட்ஷம் புட்பங்களிலிருந்து ஒரு ரூபா எடை அத்தர் கிடைக்குமெனத் தெரிகிறது.

## 3. ரோஜா அத்தர் புஷ்ப முறை

அன்றலர்ந்த ரோஜா புட்பங்களைக் கொண்டுவந்து முற்றும் முடிய காம்பை கிள்ளிவிட்டு, சுத்தமானதும், வாய் விசாலமாயுள்ளதுமான தோர் கண்ணுடிப் பாத்திரத்தில் இரண்டு வரிசை புஷ்பங்களை அடுக்கி, அதற்குமேல் வெண்மை நிறம் தாங்கி, மிகவும் மெல்லியதாய் நுணுக்கிய உப்புப் பொடியை, எல்லாப் பக்கங்களிலும் நன்குபடும்படி தூவி, ஒலிவ எண்ணெயில் நனைத்தெடுக்கப்பட்ட பஞ்சை மெல்லியதாய் மேற்புறத்தில்மூடி, முன் போலவே ரோஜா புஷ்பங்களை, வரிசைகிரமமாக அடுக்கி, வாய்ப்புறம்வரை இவ்வண்ணமே செய்து, வாயகத்தை வெண்துணியால் பொதிந்துமூடி, ½ மண்டல காலம்வரை சூரிய புடம்வைத்து, பின் பஞ்சைப் பிழிந்து, எடுத்துக் கொள்ளவும்.

## 4. ரோஜா அத்தர் (புஷ்ப வேறு முறை)

அத்தருக்கான ரோஜா மலர்களை, முக்கால் திட்டம் மலர்ந்ததாகக் கொண்டுவந்து தாழை காம்புகளை நீக்கிவிட்டு, வாய் குறுகலாயுள்ளதும் உடம்பு கனத்ததுமானதோர் மண் பாத்திரத்தில் முன் கூறின விதமே, புட்பங்களையும் உப்புத் தூளையும் வரிசை கிரமமே போட்டுக்கொண்டே வந்து, பாத்திரம் நிரம்பியதும், பாத்திரத்திற்கு மூடியிட்டு அகலமான துணியினுல் சீலை மண் செய்து பூமிக்குள் குழிதோண்டி புதைத்து விடவும். சுமார் ஒரு மண்டல காலம் கழித்து பாத்திரத்தை வெளியிலெடுத்து, ரசத்தை பிழிந்தெடுத்துக் கொள்ளவும். இவ் வண்ணம் பிழிந்தெடுக்கப்பட்ட ரசத்தை வெண்மையானதோர் சிசாவில் பத்திரப் படுத்தி. திட்டமாக வெய்யலில் புடம் வைத்து நீரைப்போக்கி அத்தராக்கிக் கொள்ளவும். இது சத்துள்ள ரசமானதால் சுகந்தமளிப்பதில் மிகுந்து விளங்கும்.

[குறிப்பு :—பெரும்பாலும் அத்தரானது பனிமிகுந்துள்ள பனிகால இரவுகளில் செய்யப்படுகின்றதெனினும், மழை காலத்திலும் பறிக்கப்படும் புட்பங்களில் தேங்கி நிற்கும் பனி (தண்ணீர்) துளிகளினுல், அத்தரானது அவ்வளவாக பரிமளிப்ப

இல்லை. ஆகவே, இக் காலங்களில், பனி ஒழிந்த பிறகும், மழை நின்று, வெய்யில் அடித்து காய்ந்த நிலையிலும், புஷ்பங்களை சேகரம் செய்து உபயோகித்தல் வேண்டும் ]

## 5. மல்லிகைப்பூ அத்தர் (சுலப முறை)

| | | |
|---|---|---|
| மல்லிகைப் பூ எசன்ஸ் | 280 | கிராம் |
| லிம்மன் ரோஸ் | 56 | ,, |
| சுகந்த சந்தனத் தைலம் | 56 | ,, |
| லெமன் ஆயில் | 140 | ,, |
| நல்ல எண்ணெய் | 525 | ,, |

இவைகள் யாவற்றையும் ஒன்று சேர்த்து, ஒரு புட்டியில் அடைத்து கார்க்கிட்டுக் கொள்ளவும். கலர் தேவவையானல் ஒரு துண்டு அல்கனெட் வேரைச் சேர்த்துக் கொள்ளவும். இது மிகவும் சுலபமான முறையாதலால் எல்லோரும் பிரயாசை யின்றிச் செய்யலாம்.

## 6. புஷ்ப எசன்ஸ் சேகரிக்கும் விதம்

புஷ்பங்களிலிருந்து எசன்ஸ் எடுப்ப தென்பது, இயற்கை வனப்புடன் சுகந்த மிகு மலர் குழாத்தினின்றும், அவ்வர்க் கத்தின் வாசனை திரவத்தை நேர்மையுடன் இறக்குதலென்பதாம். இதனை சர்வ சாதாரணமாய்ச் செய்யலாம். புஷ்பங்களினின்றும் சத்தெடுக்க தேவைவான மூலப் பொருள்கள், நறுமணமிகும் நல்ஜாதி புட்பங்களும், அவைகளினின்று வெளிப்படும் வாசனைத் தைலத்தை சேகரிக்கும் பாத்திரங்களுமே. இத் தொழிலின் கண் உபயோகிக்கப்படும், பாத்திரம் மண் அன்றேல் அலுமினிய பாத்திரங்களாகவு மிருத்தல் வேண்டும். பாத்திரமும், புட்பங் களும் சேகரிக்கப்படட்டு சித்தமானதும், புஷ்பங்களை தேவையான தண்ணீருடன் திராவக மிறக்கும் பாத்திரத்திலிட்டு இளங் காச்சலில் காய்ச்சி திரவமாகச் செய்துக் கொள்ளுதல் வேண்டும். காய்ச்சும் காலத்து, கஷாயத்தை அதிஜாக்கிரதையுடன் தீய்ந்து விடாதபடி கண்காணித்தலவசியம் பண்டத்தினின்றும் வெளிக்

கிளம்பும் ஆவிப்படலத்தை திறந்துவிட்டு வெளிப்படுத்தி, குளிரச் செய்து திரவமாக்கிக்கொள்ளுதல் முறைமை. பின், ஷ திரவத்தை, சர்பத், வாசனை புகையிலை. சிகரெட் முதலியவற்றிற்கு உபயோகப்படுத்திக் கொள்ளலாம்.

# ஊது வத்தி வகை

## அத்தியாயம் 10

## 1. ஊதுவத்தி செய்யத்தொடங்கு முன் அறிய வேண்டிய

## சில முக்கிய விஷயங்கள்

ஊதுபத்தித் தொழில் செய்யத் தொடங்குவோருக்கு கீழ் காணும் விஷயங்கள் பயன் தரத்தக்கன வென்னும் உயரிய நோக்கத்துடன் எழுதியுள்ளோம். அன்பர் கவனிப்பார்களாக. இத் தொழிலுக்கு அதிகப்படியான முதல் தேவையில்லை யெனினும் வியாபாரத்தில் அதிக கவனம் செலுத்துதல் அவசியம். இதனை ஒவ்வொரு குடும்பத்து பெருமக்களும், மற்று முள் ளோரும், விரும்புவராதலால், செலவாணிக்கு அஞ்சவேண்டுவ தில்லை. காரணம் :– முற்றுந் துறந்த முனி புங்கவரும் பரிமள சுகிர்தானந்தத்தை விரும்புகின்றனரெனின் ஏனைய மாந்தரின் விருப்பத்தினை இங்குறைக்க வேண்டுவதில்லையன்றோ? ஆகவே, பரிமளத்தை வேண்டாதவர் ஒருவரும் இலர் என்ற கூறுதல் வேண்டும். எனினும் பரிமளத்தை மாந்தர் விரும்புவரேயன்றி, ஏனைய வாடையை விரும்புவதில்லை யாதலால் அன்னாரை திருப்தி செய்வான்வேண்டி பரிமளத்தை ஊது வத்தியினிடம் எவ்வளவுக் கெவ்வளவு பரிமளிக்கச் செய்ய முடியுமோ அவ் வளவுக் கவ்வளவு பிரயாசைப்பட்டுகொண்டு வருதல்வேண்டும். மேலும், அதன் கண் சேர்க்கப்படும் வாசனை திரவியங்கள் உயர்ந்தனவாயும் புத்தம் புதியனவாயு மிருத்தல் வேண்டும்

ஏன் எனில் எவ்வளவு உயர்ந்த சரக்காயிருந்தாலும் நாள் பட்டதாயிருந்தால், சுகந்த மளிப்பதில்லை மற்றும், கையாளும் சரக்கதனை நன்ருய் இடித்து, பின் மைபோலரைத்துத்தான் உபயோகித்தல்வேண்டும். இல்லையேல், குச்சியின்றும் சரக்கானது ஒட்டாது கீழ்விழ ஏதுவாகும். உபயோகிக்கும் குச்சியும் மிக மெல்லியதாகவும் நைசாக சீவப்பட்டதாகவு மிருத்தல் நலம். எக்காலத்தும், யாது காரணம் கொண்டும், நிழலி லன்றி, வெய்யிலில் ஊதுவர்த்தியை உலர்த்தலாகாது.

[காரணம் :—ஊதுபத்தி பொரிந்து வெடித்துப் போவ தன்றியில், நிறமும் கெட ஏதுவாகும். குச்சியினிடம் வத்திச் சரக்குகளை ஒட்டவைக்குங் காலத்து ஒழுங்கான முறையில் நிதானமாக உருட்டிச் செய்தல்வேண்டும் ]

## உ. அம்பர் ஊதுபத்தி

| | |
|---|---|
| வெட்டி வேர் | விலாமிச்சம் வேர் |
| லவுங்கப்பட்டை | லவுங்க பத்திரி |
| தேவதாரப்பட்டை | மரிக்கொழுந்து |
| கிளியூரல் பட்டை | கோரைக்கிழங்கு |
| மைசாக்ஷி | சம்பங்கி மொக்கு |

மேற்கண்டவைகளை வகைக்கு இரண்டு பலமாகக் கொண்டு, இடித்துத் தூளாக்கி ஜலித்து வஸ்திரகாயம் செய்ததும்,

| | | |
|---|---|---|
| மட்டிப்பால் | 700 | கிராம் |
| சந்தனத்தூள் | 700 | " |
| சாம்பிராணி | 525 | " |
| பச்சிலை | 350 | " |
| கோஷ்டம் | 70 | " |
| லவங்கம் | 70 | " |
| தாளிசப்பத்திரி | 70 | " |
| மகிழம்பூ | 105 | " |

| | | |
|---|---|---|
| குலாப்பூ | 105 | கிராம் |
| அன்னாசிப் பூ | 105 | ,, |
| ஏலம் | 105 | ,, |
| ஜாதிக்காய் | 70 | ,, |

இவைகளை வகை எடை தவராது சேர்த்து, நன்ருய் இடித்து தூளாக்கி, வஸ்திரகாயம் செய்து, மேற்கண்ட தூளுடன் சேர்த்து தேவையான சுகந்த பன்னீர் விட்டு மைபோலரைத்து, 560 கிராம் ஆவாரம் கரி, ¼ லிட்டர் மலைத்தேன், 140 கிராம் கல்கண்டு இவைகளையும் சேர்த்து நன்ருய் அறைத்து 6 கிராம் எடை புனுகு, ஜ்வ்வாது, பச்சை கற்பூரம் சேர்த்து நன்ருய் பிசைந்து வர்த்தி செய்து நிழலில் உலர்த்தி எடுத்து வைத்துக் கொள்ளவும்.

## 3. சாம்பிராணி வத்தி

| | | |
|---|---|---|
| சாம்பிராணி | 560 | கிராம் |
| கோரைக் கிழங்கு | 210 | ,, |
| கிச்சிலிக் கிழங்கு | 210 | ,, |
| சந்தனம் | 350 | ,, |
| சந்தனப் பொடி | 280 | ,, |
| வெட்டி வேர் | 420 | ,, |
| பன்னீர் | 280 | ,, |

மேற்கண்டவைகளை இடித்துத் தூளாக்கி, வஸ்திரகாயம் செய்து, பன்னீர் விட்டறைத்துக் கொண்டு, அம்பர் புனுகு, பச்சை கற்பூரம் வகைக்கு 6 கிராம் எடையாகச் சேர்த்து நன்ருய்ப் பிசைந்து மெல்லியதாக வர்த்தி செய்துக்கொள்ளவும்

## 4. பரிமள பூஜா வத்தி

| | | |
|---|---|---|
| சந்தனத்தூள் | 350 | கிராம் |
| கதிர் பச்சை | 210 | ,, |
| வெட்டிவேர் | 140 | ,, |

| | | |
|---|---|---|
| குருவிவேர் | 105 | கிராம் |
| கோரைக் கிழங்கு | 140 | ,, |
| இச்சிலிக் கிழங்கு | 140 | ,, |
| அகிற்கட்டை | 210 | ,, |
| தவனம் மருவு | 108 | ,, |
| பூலாங் கிழங்கு | 70 | ,, |
| மட்டிப்பால் | 350 | ,, |
| மகிழம்பூ | 70 | ,, |
| பச்சை இலை | 70 | ,, |
| பவுடர் | 140 | ,, |
| குலாப்பூ | 70 | ,, |
| தாளிசபத்திரி | 52 | ,, |
| பாரிஜாத புஷ்பம் | 52 | ,, |
| ஜடமாஞ்சில் | 105 | ,, |
| திருநீற்றுப்பச்சை | 70 | ,, |

இவைகளை நன்ருய் இடித்து, தூளாக்கி, வஸ்திரகாயம் செய்துக்கொண்டு, சுகந்த பன்னீர் கொடுத்து மைபோலறைத்து ஊதுவத்தி செய்துக்கொள்ளவும். பின் நிழலில் உலர்த்தி உபயோகம் செய்யவும்.

## 5. சந்தன ஊதுபத்தி

| | | |
|---|---|---|
| சந்தனப் பொடி | 700 | கிராம் |
| சாம்பிராணி பொடி | 700 | ,, |
| வெட்டி வேர் | 350 | ,, |
| இச்சிலிக்கிழங்கு | 175 | ,, |
| புனுகு | 41 | ,, |
| கஸ்தூரி | 18 | ,, |

இவைகளை வகை எடை தவராது ஒன்று சேர்த்திடித்து பன்னீரில் குழைத்து, திட்டமான அளவில் வத்தி செய்து நிழலில் உலர்த்தி உபயோகிக்கவும்.

## 6. சந்தன ஊதுவத்தி [வேறு வகை]

| | | |
|---|---|---|
| சந்தனம் | 350 | கிராம் |
| சாம்பிராணி | 105 | ,, |
| மைலாலக்கடிப்பட்டை | 175 | ,, |
| மட்டிப்பால் | 70 | ,, |
| அகில் கட்டை | 70 | ,, |
| கிச்சிலிக்கிழங்கு | 70 | ,, |
| கோரைக்கிழங்கு | 70 | ,, |
| சம்பங்கி மொக்கு | 70 | ,, |
| பச்சிலை | 70 | ,, |
| வெட்டி வேர் | 35 | ,, |
| விலாமிச்சம் வேர் | 35 | ,, |
| அன்னுசிப்பு | 70 | ,, |
| குலாப்பு | 70 | ,, |
| லவுங்கம், லவுங்கப்பட்டை | 70 | ,, |
| லவுங்க பத்திரி | 35 | ,, |
| கார்போக அரிசி | 35 | ,, |
| கிளியூரல் பட்டை | 35 | ,, |
| ஏல அரிசி | 35 | ,, |
| மருவு, மரிக்கொழுந்து | 35 | ,, |
| நகம் | 18 | ,, |
| ஜாதிக்காய் | 18 | ,, |
| தவனம் | 35 | ,, |

மட்டிப்பால் நீங்கலாக ஏனையவற்றை நன்ருய் இடித்துத் தூளாக்கி, ஜலித்து வஸ்திரகாயம் செய்துக்கொண்டு ஜலத்துடன் மட்டிப்பாலையும் சேர்த்து கலுவத்திலிட்டு மைபோலரைத்து வத்தி செய்து நிழலிலுலர்த்தி 70 கிராம் சந்தன அத்தரும், சுமார் 9 கிராம் எடை புனுகும் சேர்த்து வத்தியின்மேல் தடவி உபயோகிக்கவும், சுகமாயிருக்கும்.

## 7. சுகந்த பரிமள ஊதுவத்தி

| | |
|---|---|
| சந்தனக்கட்டை | தேவதாரம் |
| பூலாங்கிழங்கு | ஜடாமாஞ்சில் |
| கோரைகிழங்கு | விலாமிச்சம் வேர் |

இவைகளை வகைக்கு ஒரு பலமாகக்கொண்டு ஒன்று சேர்த்து இடித்துத் தூளாக்கி வஸ்திரகாயம் செய்துக்கொண்டதும்,

| | |
|---|---|
| கருவாப்பட்டை | இளியூரல்பட்டை |
| லவுங்கம் | அன்னுசிப்பூ |
| பால் சாம்பிராணி | |

மேற்கண்டவைகளில் வகை ஒன்றுக்கு 18 கிராமாக நிறுத்தெடுத்துக்கொண்டு, இளந்தனலில் சிறிது பொன்னிறப் பதமாக வறுத்தெடுத்து நன்ருய் இடித்து வஸ்திரகாயம் செய்து கலந்து வைத்துக்கொள்ளவும். யாவும் சுத்தமானதும்,

| | | |
|---|---|---|
| நெய்யரிசிப்பால் | 18 | கிராம் |
| மட்டிப்பால் | 35 | ,, |
| தேன் | 70 | ,, |
| விளாம்பிசின் | 70 | ,, |

இவைகளைச் சிறிது சுத்த ஜலம் விட்டு நன்ருய் அறைத்துக் கலக்கிக் கொண்டதும், மேற்கண்ட தூளைச்சேர்த்து பிசைந்து, ஓர் வெண்தட்டில் (பிங்கான் தட்டில்) எடுத்து வைத்துக்கொண்டு மெல்லியதாக சீவி சித்தமாக்கப்பட்ட மூங்கில் குச்சிகளில் சிறிது விளாம் பிசினையும் தேனையும் கலந்து தடவி, பிசைந்துவைத்திருக்கும் சரக்கை மிகவும் மெல்லியதாக ஒரே அளவில் பூசி, மேற்பரப்பு சமமாக உள்ளதோர் நைசான பலகையின்மேல் மற்ருெரு துண்டு பலகையால் எல்லா பக்கங்களிலும் உருட்டி, அந்தப்படியே நிழலில் உலர்த்தவும் எவ்வளவுக்கெவ்வளவு மெல்லியதாக உருட்டுகின்ருேமோ அவ்வளவுக்கவ்வளவு ஊது வர்த்தி உடையாமலும், உதிராமலும் சுகமாக இருக்கும். ஊது

வர்த்தியை நிதானமாக ஒரே கனத்தில் உருட்டுவதில் சிறிது பிரயாசையும் அனுபவமும் தேவையென்ருலும், நாலைந்து முறை செய்தால் அனுபவம் தானுகவே ஏற்பட்டு வேலையில் உற்சாகமும் பிறக்கும்.

# சாந்து சாம்பிராணி வகை

## அத்தியாயம் 11

### 1. பரிமள சாந்து

| | | |
|---|---|---|
| பிளாக் பவுடர் | 28 | கிராம் |
| ரோஸ் எசன்ஸ் | 21 | " |
| பாம்பயா சென்ட் | 14 | " |
| பன்னீர் | 56 | " |
| கஸ்தூரி தைலம் | 14 | " |
| பிசின் (கோந்து) | 280 | " |

வெண் பிசினை தண்ணீரில் நன்ருய்க் கரைத்து வடிகட்டி எடுத்துக்கொண்டு கறுப்பு கலர் பவுடரையும், வாசனைத் திரவியங்களையும் ஒன்றுசேரக் கூட்டி, நன்ருய்க் கலக்கிவிட்டு நல் பதத்தில் உபயோகிக்கவும்

### 2. சிகப்பு சாந்து

மேற்கண்ட வாசனைத் திரவியங்களுடன் கறுப்பு கலருக்குப் பதிலாக சிகப்பு கலரை உபயோகிக்கவும். தேவையாயின் சிறிது பன்னீரை அதிகப்படியாகக் கூட்டிக்கொள்ளவும்.

### 3. சாம்பிராணி

| | | |
|---|---|---|
| குங்குலியம் (வெள்ளை) | 1400 | கிராம் |
| வாழைக்கட்டை சாறு | 2 | லிட்டர் |
| சந்தனத் தூள் | 350 | கிராம் |
| புளியன் பட்டை | 280 | " |

வாழைக்கட்டைசாறு நீங்கலாக, ஏனையவற்றை ஒன்று சேர்த்திடித்து விசாலமானதோர் செப்புப்பாத்திரத்திலிட்டு இளந்தணலில் விடாது கிளறி, பாகு பதத்தில் இறக்கி, ஆறினதும், உடைத்து உபயோகிக்கவும்.

## 4. சாம்பிராணி (வேறு முறை)

| | | |
|---|---|---|
| வெள்ளைக் குங்கிலியம் | 675 | கிராம் |
| லவங்கப்பட்டை | 175 | ,, |
| ஆவாரம்பட்டை | 175 | ,, |
| சந்தனம் | 420 | ,, |
| மைசாட்சி | 175 | ,, |
| சூடம் | 175 | ,, |
| வாழைக்கட்டைச்சார் | 4 | லிட்டர் |

மேற்கண்டவைகளை இடித்து தூளாக்கிக்கொண்டு யாவற்றையும் ஓர் செப்புப் பாத்திரத்திலிட்டு, அடுப்பேற்றிக் காய்ச்சி, நல் பாகுபதத்தில் இறக்கி, ஆறினதின் பின் சுமார் 10 நாட்கள் கழித்து உபயோகிக்கவும்.

## 5. கற்பூரம்

| | | |
|---|---|---|
| வெள்ளைக் குங்கிலியம் | 1400 | கிராம் |
| நீலம் | 10 | ,, |
| வாழைக் கட்டைச்சார் | 4 | லிட்டர் |
| விளக்கெண்ணெய் | $\frac{1}{8}$ | ,, |

வெள்ளைக் குங்கிலியத்தை பொடிசெய்து, ஓர் செம்புப் பாத்திரத்திலிட்டு, அதன் கண் வாழைக்கட்டைச்சாரை யூற்றி, அடுப்பேற்றிக் காய்ச்சி, நல்பதத்தில் நீலத்தைச் சேர்த்து, கட்டியான பாகுபதத்தில் எண்ணெயை நிதானமாகக் கல்ந்து விடாது கிளறி, கீழிறக்கி, ஆறவிடுத்து பின், உபயோகிக்கவும்.

## 6. சோம்பு ஜலம்

8 லிட்டர் சுத்த ஜலத்தில் சுமார் 2100 கிராம் சோம்பை தூசி, குப்பை, முதலியன நீக்கிப்போட்டு ஐந்து நாட்கள்வரை ஊறவைத்திருந்து, அந்தப்படியே, "வாலை" யிலிட்டு அடுப்பேற்றி, திராவகம் இறக்கிக்கொள்ளவும். தேவையாயின் ஒன்றிரண்டு படி ஜலத்தை அதிகமாகச் சேர்த்துக்கொள்ளவும்.

## 7. ஓம திராவகம்

| | | |
|---|---|---|
| ஓமம் | 1400 | கிராம் |
| சுத்தஜலம் | 6 | லிட்டர் |

ஓமத்தை கல், கண், முதலியன நீக்கி, சுத்தம் செய்து விசாலமானதோர் பாத்திரத்தில், நீருடன் சுமார் 4 நாட்கள் ஊறவைத்திருந்து, மறுநாள், சுமார் 3 லிட்டர் ஜலம்விட்டு மூடியிட்டு கொதிக்கவைத்து, வடிகட்டின ஜலத்தை புட்டிகளில், 3, 4, துளி ஓம எஸன்ஸ்சுடன் வார்த்து, நன்றாய் குலுக்கிவிட்டு உபயோகிக்கவும்.

## 8. வாசனை சுண்ணாம்பு

| | | |
|---|---|---|
| கிளிஞ்சல் சுண்ணாம்பு | 453 | கிராம் |
| ரோஸ் கலர் | 3 | " |
| ரோஸ் அத்தர் | 20 | " |
| பெப்பெர்மெண்டு சால்டு | 3 | " |
| பச்சை கற்பூரம் | 3 | " |

கிளிஞ்சல் சுண்ணாம்பை நல்ல ஜலச் சேர்க்கையுடன் தாளித்து, வடிகட்டிக்கொண்டு திட்டமான இளநீர் தண்ணீருடன் மேற்கண்ட வாசனை சரக்குகளையும் கூட்டி, வாயகன்ற கண்ணாடி ஜாடிகளில் சேமித்து வைத்துக்கொள்ளவும். இது கலியாணம், மற்றும், குடும்பங்களில் நிகழும் விசேஷ காலங்களிலும் பண்டிகை முதலிய நன்னாட்களிலும் வெற்றிலை பாக்குடன் உபயோகிக்கத் தகுந்தது. தேவையாயின் விற்பனையும் செய்யலாம்.

# சுகந்த மூக்குத்தூள் வகை

## அத்தியாயம் 12

### 1. பரிமள மூக்குத்தூள்

| | | |
|---|---|---|
| மூக்குத்தூள் | 560 | கிராம் |
| பச்சை கற்பூரம் | 28 | ” |
| அத்தர் | 28 | ” |
| ஸ்மெல்லிங் சால்ட் | 56 | ” |
| மெந்தால் | 28 | ” |

இவைகளை பின் கூறப்பட்ட ஐந்தையும் பன்னீரில் கலந்தரைத்து, மூக்குத்தூளுடன் சேர்த்து காற்றுப்புகாததோர் கல் கார்க்கிட்ட ஜாடியில் சேமித்து வைத்துக்கொள்ளவும். தேவையானபோது உபயோகிக்க சுகந்த மளிக்கும்

[குறிப்பு :—மூக்குத்தூளுக்கு உகந்ததோர் புகையிலையை பொறுக்கி யெடுத்து, தூசி குப்பை அணுகாவண்ணம் வெய்யலி விட்டு, காயச்செய்து, தூளாக்கி, ஒன்றிற்கு மூன்று தடவை வஸ்திரகாயம் செய்து உபயோகிக்கவும் புகையிலையை வெய்யி லில் காயவைக்கும் பொழுது, வெளிக்குப்பை உள்ளில் சேராத படி ஒரு மல்லின் துணியால் புகையிலைகளை மூடிவைப்பது நல்லது. புகையிலை நன்ருய் (முற்றும் முடிய) உலர்ந்த புகையிலையானது கைப்பட்ட மாத்திரத்திலேயே, உடைந்து தூளாக்கு மாதலால் அந்த நிலையில்தான் புகையிலையை பொடிக்கென சேகரித்தல்வேண்டும்.]

### 2. சுகந்த மூக்குத்தூள்

| | | |
|---|---|---|
| சுத்தமான புகையிலைப் பொடி. | 906 | கிராம் |
| ஸ்மெல்லிங் சால்ட் | 70 | ” |
| பன்னீர் | 28 | ” |
| ஆட்டோடீரோஸ் | 7 | ” |

இவைகளை மெல்லியதான நிலையில் நன்ருய்க் கலந்து காற்றுப் புகாததோர் டப்பியில் அடைத்துக்கொண்டு, தேவையானபோது சிறிதெடுத்து உபயோகிக்கவும்.

### 3. வாசனை புகையிலை

| | | |
|---|---|---|
| ஏலம் | 18 | கிராம் |
| சுக்கு | 105 | " |
| மிளகு | 70 | " |
| திப்பிலி | 35 | " |
| கிராம்பு | 70 | " |
| ஜாதிக்காய் | 35 | " |
| கத்தகாம்பு | 35 | " |

இவைகள் யாவையும் சுத்தம் செய்து, இடித்து, தூளாக்கி ஜலித்தெடுத்துக் கொண்டதும்,

| | | |
|---|---|---|
| உயர்ந்த புகையிலை | 1400 | கிராம் |
| வெண் சர்க்கரை | 700 | " |
| பெப்பர்மெண்டு ஆயில் | 112 | " |

இவைகளைக் கொண்டுவந்து, புகையிலையை சின்னஞ் சிறு துண்டுகளாக நறுக்கி, சர்க்கரையை, திட்டமான தண்ணீரில் பாகு வைத்து, நல்பதத்தில், புகையிலை துண்டுகளைப் போட்டு கிளறி, கடைசியாக இறக்கும் தருணத்தில் வாசனை சரக்குகளையும், பெப்பர்மெண்ட் ஆயிலையும் சேர்த்து, நன்ருய் பிரட்டிக் கொடுத்து, கீழிறக்கி ஆறினதின் பின் உபயோகம் செய்யவும்.

[குறிப்பு:—வாசனை புகையிலை தயாரிக்குங்கால் சிலர் சர்க்கரைக்கு பதிலாக, வெல்லத்தையோ அன்றேல் பழுப்பு நிறமுடைய சர்க்கரையையோ சேர்ப்பது வழக்கம். ஆனுல் அது அவ்வளவாக சோபிப்பதில்லை. ஆகவே, வெண் சர்க்கரையாகிய ஜீனி சர்க்கரையையே அழுக்கெடுத்து சேர்ப்பது நலம்.]

## 4. வாசனைப் பாக்குத்தூள்

| | | |
|---|---|---|
| லவங்கம் | 140 | கிராம் |
| ஏலக்காய் | 70 | ,, |
| ஜாதி பத்திரி | 18 | ,, |
| வால் மிளகு | 50 | ,, |
| ஜாதிக்காய் | 18 | ,, |
| கசகசா | 70 | ,, |
| பச்சை கற்பூரம் | 6 | ,, |
| ரோஜா மொக்கு | 35 | ,, |
| ஒஸ்தி பிட்டின்பாக்கு | 1400 | ,, |
| குங்குமப்பூ | 12 | ,, |
| கஸ்தூரி | 3 | ,, |
| பசு நெய் | ½ | லிட்டர் |

கடைசி நான்கு நீங்கலாக ஏனையவற்றை ஒன்று சேர்த் திடித்து தூளாக்கி, வஸ்திரகாயம் செய்து வைத்துக்கொண்டு பாக்கை சுமாரான தூள் பதத்தில் இடித்து, பசு நெய்யுடன் மேற்கண்ட வாசனை திரவியத் தூளைக்கலந்து, நன்றாய் பிசைந்து, கடைசியாக குங்குமப்பூ, கஸ்தூரியையும் சேர்த்து காற்று புகாததோர் டப்பியில் அடைத்துக்கொண்டு வேளா வேளைகளில் உபயோகிக்க சுகந்தமளிக்கும்.

# பரிமள தந்த சூரண வகை

## அத்தியாயம் 13

## 1. பல் வசீகரி

| | | |
|---|---|---|
| கடுக்காய் | 70 | கிராம் |
| மாசிக்காய் | 70 | ,, |
| படிகாரம் | 140 | ,, |
| அரக்கு சுத்தம் | 70 | ,, |
| தான்றிக்காய் | 70 | ,, |

இவைகளை ஒன்று சேர்த்திடித்து தூள்செய்து ஒரு டப்பியில் அடைத்துக்கொண்டு பல் துலக்கி வந்தால் பல்லசைவு, பல் குத்தல் முதலியன நீங்கி, பல் உறுதிப்படும்.

## 2. தந்த வசீகரி

| | | |
|---|---|---|
| வேப்பம்பட்டை | 175 | கிராம் |
| கருவேலம்பட்டை | 175 | " |
| உப்பு | 35 | " |
| மிளகு | 105 | " |

மேற்கண்ட நான்கையும் சேர்த்திடித்து தூள்செய்து காலை, மாலை நேரங்களில் உபயோகிக்க வசீகர முண்டாகும்.

## 3. தந்த பிரகாச சூரணம்

| | | |
|---|---|---|
| சாம்பிராணி | 70 | கிராம் |
| மிளகு | 52 | " |
| ஏலரிசி | 35 | " |
| மாசிக்காய் | 35 | " |
| குங்குலியம் (வெள்ளை) | 35 | " |
| சுக்கு | 18 | " |

இவைகளை நன்ருய் இடித்து, ஜலித்து வஸ்திரகாயம் செய்து வைத்துக்கொண்டு, வேளா வேளைகளில் பல் துலக்கி வந்தால் பல் வசீகர முண்டாகும்.

## 4. வேறு முறை

| | | |
|---|---|---|
| கல்நார் | 105 | கிராம் |
| மிளகு | 35 | " |
| சுக்கு | 35 | " |
| கிச்சிலிக் கிழங்கு | 35 | " |
| சாம்பிராணி | 35 | " |
| வெள்ளைக் குங்குலியம் | 35 | " |

| | | |
|---|---|---|
| காசுகட்டி | 35 | கிராம் |
| லவங்கம் | 35 | ,, |

இவைகளை நன்றாய் இடித்து வஸ்திரகாயம் செய்து வைத்துக்கொண்டு உபயோகிக்கவும்.

## 5. பல்வலி சூரணம்

| | | |
|---|---|---|
| சீனக்காரம் | 280 | கிராம் |
| தூள் செய்த மிளகு | 175 | ,, |
| கடல் உப்பு | 35 | ,, |

இம் மூன்றையும் வகை எடை தவராது சேர்த்திடித்துத் தூள் செய்து வலியுள்ள இடத்தில் வைக்கவும். துர்நீர் வடிந்து சுகம் கொடுக்கும்.

[குறிப்பு: — சீனக்காரம் என்பதை படிகாரமென சிற்சில விடங்களில் வழங்குவதுமுண்டு. அவ்வாறே கேட்டு வாங்குதல் நலம் ]

## 6. தந்த சிரேஷ்டணி

| | | |
|---|---|---|
| சீமை சுண்ணும்பு (சாக்கு) | 452 | கிராம் |
| பளிங்கு சாம்பிராணி | 226 | ,, |
| பெப்பர்மின்ட் சால்ட் | 3 | ,, |
| கற்பூரம் | 3 | ,, |

முறை: — சீமை சுண்ணும்பையும் சாம்பிராணியையும் நன்றாய் பொடி செய்து ஜலித்து வைத்துக்கொள்ளவும். பிறகு தேவையாயின், ரோஸ் அல்லது சிகப்புப் பவுடரைத் தேவையான தண்ணீரில் கரைத்து, சீமை சுண்ணும்பு குவியலில் தெளித்து, தூளை பிசைந்து மேலும் கீழுமாக கிளறிவிட்டு இளம்வெய்யலில் ஆறவிடவும். நன்றாய் காய்ந்ததும் மெல்லிய துவாரமுள்ளதோர் ஜல்லடை கொண்டு செவ்வனே ஜலித்து கடைசியாக பெப்பர் மின்ட் சால்டையும் கற்பூரத்தையும் சேர்த்து டப்பாக்களில் அடைத்து உபயோகிக்கவும்.

[குறிப்பு :—நறுமணம் கமழும் பெப்பர்மின்ட் சால்ட் கடைகளில் சர்வ சாதாரணமாய் கிடைக்கும். இதுதான் பல்பொடிக்கு நல் மணத்தையும் ஜிலுஜிலுப்பையும் கொடுக்கக் கூடியது. இன்னும் வாசனை தேவையாயின், தேவையான அளவில் செண்ட் சேர்த்துக் கொள்ளவும்.

## 7. நூதன வஜ்ர தந்தத் தூள்

| | | |
|---|---|---|
| கடல்நுரை | 1400 | கிராம் |
| பெப்பர்மெண்ட் சால்ட் | 12 | " |
| கற்பூரம் | 12 | " |
| ரோஸ் செண்ட் | தேவையான அளவு | |

கடல் நுரையின் கட்டியான தோலை சுரண்டியோ அன்றேல் இடித்தோ நீக்கிவிட ஏனையவற்றையும் ஒன்று சேர்த்துப் பொடித்துத் தூளாக்கி வைத்துக்கொள்ளவும். கலர் தேவையானால் முன் கூறியபடியே செய்துக்கொள்ளவும்.

[குறிப்பு :—வாசனை தேவையாயின் மட்டும் ரோஸ் செண்டை சேர்க்கவும். இல்லையேல் தேவையில்லை. இது பற்களை அதிசீக்கிரம் வெண்மையாக்குகின்றமையால் வெண்மையாகவே இதனை உபயோகிக்கலாம். அநேகர் இதனை உபயோகித்தும் வருகின்றனர்.]

## 8. வஜ்ர தந்தத் தூள் (வேறு வகை)

| | | |
|---|---|---|
| டிவ்டிவ்கா | 1400 | கிராம் |
| கடுக்காய் தோல் கரியாக்கினது | 1050 | " |
| ஆலம் விழுது | 700 | " |

மேற்கண்ட மூன்றையும் ஒன்று சேர்த்து நன்முய் இடித்துத் தூளாக்கி வஸ்திரகாயம் செய்து வைத்துக் கொள்ளவும். இப்பேர் கொண்ட தூளானது பற்களை கெட்டிப்படுத்துவது மட்டும் அல்லாமல் சிறந்த பல்வலி மருந்துமாகும். இது காரணம் பற்றியே கடுக்காயையும் டிவ்டிவ்காயையும் கெட்டியான சாயத்திற்கு உபயோகித்து வருகின்றனர்.

## 9. தந்தப் பொடி

| | | |
|---|---|---|
| அருசு | 18 | கிராம் |
| சீனாக்காரம் | 35 | ,, |
| கடுக்காய் | 35 | ,, |
| தான்றிக்காய் | 35 | ,, |
| மாசிக்காய் | 35 | ,, |

இவைகளை நன்றாய் இடித்து தூளாக்கி ½ டஜன் எலுமிச்சம் பழச் சாற்றில் கலந்து நிழலிலுலர்த்தி பின் பொடித்து தூளாக்கி வைத்துக்கொள்ளவும். இதனை பல் துலக்கிவர சுகங்கொடுக்கும்.

## 10. தந்த சூரணம்

| | | |
|---|---|---|
| கருவேலம் பட்டை | 140 | கிராம் |
| வெள்ளை வேலன்பட்டை | 140 | ,, |
| கருங்காலி | 105 | ,, |
| நாவல் | 105 | ,, |
| வேம்பு | 105 | ,, |
| வாகை | 70 | ,, |

இவைகளை இடித்து தூளாக்கி வஸ்திரகாயம் செய்துக் கொண்டு அத்துடன் கற்பூரம், காசுக்கட்டி, கடுக்காய்ப்பொடி வகைக்கு 18 கிராம் தூளாக்கிச் சேர்த்து உபயோகித்துவர சகல தந்த ரோகங்களும் தீரும்.

# சுகந்த சர்பத் வகை

### அத்தியாயம் 14

## 1. சந்தன சர்பத்

மர இழைப்புளியால் நைசாக இழைத்தெடுக்கப்பட்ட சந்தனத்தூளில் 140 கிராம் நிறுத்தெடுத்துக்கொண்டு சுமார் 4 லிட்டர் சுத்த ஜலத்தில் 6 மணி நேரம் ஊரவைக்கவும். பின்பு அதனை அடுப்பேற்றி கமலாக்கினியில் எரித்து, ⅞ பங்கானதும்

கீழிறக்கி வடிகட்டிக் கொள்ளவும். வடிகட்டின நீருடன் 1050 கிராம் அஸ்கா சர்க்கரையைப் பாகு வைத்துச் சரியான கம்பிபதத்தில் கீழிறக்கி, ஆறவைத்து புட்டியில் அடைத்துக் கார்க்கிடவும் இதனை வேளாவேளைகளில் உபயோகிப்பதினால், பித்தம், உஷ்ண வாய்வுகளும் வெள்ளை, மூலச்சூடு முதலியனவும் நீருமெனத் தெரிகிறது.

[குறிப்பு:—சர்க்கரையை வடிகட்டின நீருடன் கலந்து பாகு வைப்பதற்குப் பதிலாக, தனியே காய்ச்சி அழுக்கெடுத்து சேர்ப்பது நலம் ]

## 2. சந்தன சர்பத் [வேறு வகை]

ஒரு பங்கு சந்தன தூளுக்கு 8 பங்கு ஜலம் கலந்து அடுப்பேற்றி, நாலில் ஒன்றாக (கால் பங்கு) வற்றச் செய்து துணியினால் வடிகட்டி எடுத்துக்கொண்டு, சுமார் 4 பங்கு கற்கண்டுத் தூளைச் சேர்த்துக் கிளறி ஆறினதின்பின் புட்டியிலடைத்து கார்க்கிட்டு உபயோகிக்கவும்.

## 3. நன்னாரி சர்பத்

140 கிராம் நன்னார் வேரை சுமார் 3 லிட்டர் தண்ணீரில் ஓர் இரவு முழுமையும் ஊரவைத்து பின், காலையில் அவ்வேரை அடுப்பேற்றிக் அரை லிட்டராகச் சுண்டவைத்து வடித்தெடுத்துக்கொள்ளவும் பிறகு சுமார் 700 கிராம் வெண்சர்க்கரையைப் பாகு வைத்து, அழுக்கெடுத்து, அத்துடன் வடிகட்டின நீரைச் சேர்த்து, நல் கம்பிப் பதமாகப் பார்த்து கீழிறக்கி ஆறவிடுத்து உபயோகிக்கவும்

[குறிப்பு :—சர்க்கரைக்குப் பதிலாக கற்கண்டு தூளையும் பாகு வைத்துச் சேர்க்கலாம். மற்றும் நன்னாரிவேர் துண்டுகளை நன்றாய் ஆராய்ந்த பின்னரே ஊறவைத்து உபயோகிக்கவேண்டும். சிற்சில சமயங்களில் நன்னாரிவேர் துண்டுகளுடன் வேற்று வேர் துண்டுகள் கலந்திடுவதால் சர்பத்தானது முற்று முடியக்கெட்டு,

கசப்புத் தோன்றிவிடும். ஆகவே இதனை அவசியம் கவனித்தல் நல்லது.

## 4. நன்னாரி சர்பத் [வேறு வகை]

சுமார் 350 கிராம் தண்ணீரில் 70 கிராம் சுத்தமான நன்னாரி வேரைப் போட்டு 4 மணி நேரம் ஊறவைத்துப்பின், அடுப்பேற்றிக் காய்ச்சி, கால் பங்காக்கிக்கொண்டு 140 கிராம் சர்க்கரையைச் சேர்த்துப் பாகாக்கி, நல் தேன் பதத்தில் இறக்கி உபயோகிக்கவும்.

## 5. நன்னாரி சர்பத் [மற்றொரு முறை]

ஒரு 1400 கிராம் நன்னாரி வேர் கொண்டுவந்து சுத்தம் செய்து வேண்டாதவைகளை அறவே நீக்கிவிட்டு, எஞ்சியவைகளை சின்னஞ்சிறு துண்டுகளாக நறுக்கி, ஒருபாத்திரத்திலிட்டு, சுத்தமான 12 லிட்டர் ஜலத்தில் ஒருநாள் (ராத்திரி பகல்) ஊறவைக்கவும். மறுநாள் விடியலில் அதனை அடுப்பேற்றி பாதியாகச் சுண்டவைத்து சிறிது சூடாயிருக்கையிலேயே வடிகட்டிவைத்துக் கொள்ளவும் பிறகு வேறொரு பாத்திரத்தில் 1400 கிராம் சர்க்கரையைப் பாகு காய்ச்சி, அழுக்கெடுத்து, முன் தயாரித்த நீரைச் சேர்த்து, சிறு தணலில் பாகாகும்வரைக் கிளறி, சரியான தேன் பதத்தில் இறக்கி வைத்துக்கொண்டு, ஆறினதின் பின், புட்டிகளில் அடைத்துக் கார்க்கிடவும்.

## 6. நன்னாரி சர்பத் [சுலபமான முறை]

1400 கிராம் அஸ்கா சர்க்கரையைக் கொண்டுவந்து 6 லிட்டர் சுத்த ஜலத்தில் பாகாகக் காய்ச்சவும். சர்க்கரைப்பாகு சரியான பதத்திலிருக்கும் பொழுது கடைகளில் கிடைக்கும் நன்னாரி எசன்ஸ் 28 கிராம் சேர்த்து, கிளறிவிட்டு, பாட்டல்களில் அடைக்கவும். அழகான வர்ணம் தேவையானால் சிறிது ரோஸ் அல்லது மஞ்சள் கலர் சேர்த்துக்கொள்ளவும். இதனால் அநேக வியாதிகள் சொஸ்தமாகின்றன வெனினும் முக்கியமாக இரத்த விர்த்தி

ஏற்பட்டு திரேகத்திற்கு நலனும், மனத்திற்கு சந்துஷ்டியும் கொடுத்து மேகச்சூடு, ஜுரம் முதலிய வியாதிகளையும் நீக்குகின்றது. இதனை குறைந்தது ஒரு மண்டலமாவது சாப்பிடுதல் நலம். அப்பொழுது இதன் குணத்தை கண்கூடாகக் காணலாகும்.

[குறிப்பு :—அநேகமாய் இக்காலங்களில் இம்முறைதான் அனுஷ்டிக்கப்படுகின்றது மேலும் இம்முறையானது அதிசீக்கிரம் சித்தியாவதுடன் கால நஷ்டத்தையும் போக்குகின்றது. ஆகவே இதனை ஒவ்வொரு குடும்பத்தாரும் தாமே செய்து இன்புறலாமென்பது அறியக்கிடக்கின்றது மற்றும் இப்பானத்தை வெய்யில் மிகுந்துள்ள காலமாகிய மார்ச், ஏப்ரல், மே, ஜுன் மாதங்களில் அருந்திடுதல் சிரேஷ்டமானதாகையால் அக்காலத்தில் உபயோகித்தல் நலம் இத்துடன் எலுமிச்சம் பழரசமும் கலந்து உபயோகித்தல் இன்னும் சிரேஷ்டமாம்.

---

## 7. திராட்சை சர்பத்

கனிந்து உருண்டுதிரண்ட திராட்சைப் பழங்களைத் தண்ணீர் விட்டுப் பிசைந்து, தனி பாத்திரத்தில் வெண்துணியின் வழியே நீரை வடிகட்டிக்கொண்டு 2 லிட்டர் ரசத்திற்கு 1050 கிராம் சர்க்கரையாகச் சேர்த்து, அடுப்பேற்றி காய்ச்சி நன்ருய் துளாவி கொடுத்து திட்டமான தேன் பதத்தில் கீழிறக்கி ஆறினதின்பின் பாட்டில்களில் அடைத்து கார்க்கிட்டு உபயோகிக்கவும். இது பித்த சூட்டையும், கண் எரிச்சலையும் போக்குவதால் இதனை காலை மாலை உபயோகித்தல் திரேக ஆரோக்கியத்திற்கு நல்லது

## 8. பாதாம் சர்பத்

| | | |
|---|---|---|
| பாதாம் பருப்பு | 280 | கிராம் |
| வெள்ளைச்சர்க்கரை | 2100 | ” |
| குங்குமப்பூ | 6 | ” |
| பன்னீர் | 84 | ” |

பாதாம் பருப்பை இளவெந்நீரில் சுமார் அரை மணி நேரம் ஊறவைத்திருந்துபின், மேல்தோலை சிறு கத்திகொண்டு மேலாக சீவிச் சுத்தம் செய்யவும். இவ்விதம் சுத்தம் செய்யப்பட்ட பருப்பை நன்ருக ஆட்டிப்பால் பிழிந்து, இளந்தணலில் அடுப் பேற்றி, பொன்னிற பதத்தில் சர்க்கரையையும், பன்னீரையும் சேர்த்து, தேன் பாகானதும் இறக்கி குங்குமப்பூவைக் கலந்து உபயோகிக்கவும். இது மிகவும் சத்துள்ள பானமாகையால் தேகத்திற்கு திடகாத்திரமும், நரம்புகளுக்கு வலுவையும், மனத் திற்கு உற்சாகத்தையும் கொடுத்து மேனி காந்தியை மிளிரச் செய்யுமென்பதில் ஐயமில்லை.

[குறிப்பு:—இத்தகைய சர்பத்துக்கள் அதிக நாட்கள் தாங்க கூடாதவையாதலின் சீக்கிரமே காலி செய்வதுடன் ஒவ்வொரு தடவை உபயோகிக்குங் காலத்தும் புட்டியை குலுக்குதல் அவசியம். வர்ணம் தேவையாயின் சிறிது ரோஸ் பவுடர் சேர்த் துக்கொள்ளவும். வேனிற்காலத்திற்குகந்த நல்பானமாகும்.]

## 9. ரோஸ் சர்பத்

ரோஜா புஷ்பங்களின் மெல்லிய இதழ்களை நிழலில் காய வைத்து, 2 லிட்டர் ஜலத்தில் வேகச் செய்து மூன்றிலொன்ருகச் சுண்டினதும் முன் கூறின விதமே சர்க்கரைச் சேர்த்துச் சரியான கம்பி பதத்தில் இறிறக்கி ஆறவிடுத்து புட்டியில் அடைத்து விடவும்.

## 10. தாமரைப்பூ சர்பத்

வெள்ளைத் தாமரை புட்பங்களைக் கொண்டுவந்து நிழலில் உலர்த்தி, 2 லிட்டர் ஜலத்தில் வேகவைத்துச் சுண்டினதும் வடிகட்டி எடுத்துக்கொண்டு 2100 கிராம் வெண் சர்க்கரையைச் சேர்த்துப் பாகு காய்ச்சிச் சரியான தேன் பதத்திலிறக்கி உபயோகிக்கவும்.

## 11. மாதுளம் சர்பத்

மாதுளம் பழங்களைத் தோல் நீக்கிச் சுத்தம் செய்து தேவையான ஜலத்துடன் சேர்த்துப் பிசைந்து சாறெடுத்து முன்கூறினதின்படியே சர்க்கரைச் சேர்த்துச் சர்பத்து செய்து கொள்ளவும். இது சூட்டைத் தணிக்குமாகையால் கடுப்புக்கு நல்லது.

## 12. புளி மாதுளம் சர்பத்

இதனை மேற்குறித்தபடியே சர்பத்துச் செய்து கொள்ளவும் ஆனால் பாகு காய்ச்சுகையில் தியாதபடி பார்த்துச் சரியான தேன் பதத்தில் இறக்கிக்கொள்ளல் நலம். இவ்வண்ணமே தேமாதுளம், கொடி மாதுளம் முதலிய மாதுளஞ் சர்பத்துக்களையும் செய்துக்கொள்ளவும்.

## 13. அத்திப்பழம் சர்பத்

அத்திப் பழங்களைத் தண்ணீர்விட்டுப் பிசைந்து, சாறு பிழிந்து, முன் கூறியபடியே சர்க்கரையைச் சேர்த்துப் பாகு

காய்ச்சி, தேன் பதத்தில் இறக்கி, ஆறவைத்துப் புட்டியில் அடைத்து, கார்க்கிட்டு உபயோகிக்கவும்.

## 14. எலுமிச்சம்பழ சர்பத்

எலுமிச்சம் பழங்களைச் சாறு பிழிந்துகொண்டு, விதை முதலியன நீக்கி, வடிகட்டி 1 லிட்டர் ஜலம் சேர்த்து, 2800 கிராம் சர்க்கரை கலப்பில் பாகு காய்ச்சிச் சரியான தேன் பதத்தில் கீழிறக்கி ஆறவிடுத்து உபயோகிக்கவும்.

## 15. ஆரஞ்சுப்பழ சர்பத்

மேற்குறித்தவாறே ஆரஞ்சு பழங்களைத் தோல், கொட்டை முதலியன நீக்கிச் சாறு பிழிந்து, சர்க்கரை சேர்த்துப் பாகு காய்ச்சி சர்பத் செய்துக்கொள்ளவும்.

## 16. அன்னுசிப்பழ சர்பத்

அன்னுசிப் பழங்களை மேல் தோல் சீவி, சாறு பிழிந்து $1\frac{1}{2}$ லிட்டர் சாறுக்கு 1400 கிராம் சர்க்கரையாகக் கலந்து, பாகு காய்ச்சி, சர்பத் செய்துக்கொள்ளவும்.

"மணீஸ்" பரிமள போதினி

சம்பூரனம்

முற்றிற்று.

"இந்தியர் நல்வாழ்வு பெருக"



# எம்மிடம் கிடைக்கும் நூல்கள்

| | ரூ | பை. |
|---|---|---|
| மாயாஜாலம் என்னும் மைவித்தை | 2 | 50 |
| ஏழைகளுக்கான எளிய வைத்தியம் | 2 | 00 |
| அக்கினி ஆரூடம் பாய்ச்சிகை சாஸ்திரம் | 2 | 00 |
| ஸ்ரீ பகவத் கீதை | 5 | 00 |
| வருஷாதி நூல் | 3 | 50 |
| அனுபோக சோதிட பிரம்ம ரகசியம் | 2 | 00 |
| கோழி வளர்ப்பு | 1 | 50 |
| சத்தியநாராயண விரதம் | 0 | 70 |
| அனுபவ ஹஸ்தரேகை சாஸ்திரம் | 3 | 00 |
| பதினெண்சித்தர் பாடல்கள் | 1 | 50 |
| விஞ்ஞான தத்துவ ஹஸ்தரேகை சாஸ்திரம் | 1 | 50 |
| சகல தோஷ நிவர்த்தி | 2 | 00 |
| மெஸ்மரிசம் என்னும் ஜாலவித்தைகள் | 2 | 00 |
| பச்சிலை மூலிகை அகராதி | 2 | 00 |
| மாந்திரீக சித்தன் | 2 | 00 |
| பீதாம்பர ஐயர் ஜாலம் | 3 | 0 |
| கீரை வைத்தியம் | 1 | 5 |
| மருந்தில்லா வைத்தியம் | 1 | 5 |
| சத்துள்ள உணவின் ரகசியம் | 1 | 5 |
| கண்கட்டு வித்தைகள் | 1 | 5 |
| சந்திரகாவியம் உரை | 1 | [illegible] |

---

A. சிவப்பிரகாச முதலியார்

24, தாண்டவராய பிள்ளை தெரு

சௌகார்பேட்டை போஸ்ட் சென்னை-1

